உ

ஓம் சக்தி

அருள்மிகு

# ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரர் ஆலயம்

நான்காவது பிரதான சாலை, நங்கைநல்லூர்,
சென்னை - 600 061.




## அஷ்டபுஜ சாந்தி துர்க்கை

## ஆலய பக்திப் பாடல்கள் - 2015

சாந்தி துர்கா ஸுவாஸினி மண்டலி



இந்த புத்தகத்தை வெளியிட நிதிஉதவி செய்த அனைவருக்கும் விளம்பரம் கொடுத்தவர்களுக்கும் **ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரி அம்பாள் சமேத ஸ்ரீ அர்த்த நாரீஸ்வர ஸ்வாமியின் பரிபூரண கிருபையும் ஸ்ரீ சாந்தி துர்கா பரமேஸ்வரியின் பரிபூரண கிருபையும்** கிடைக்க வேண்டுமென்று மனதார பிரார்த்தனை செய்து கொள்வதுடன் எங்கள் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்படிக்கு

**சாந்தி துர்கா சுபாஸினி**

**மண்டலியினர்**



உ

# குரு ஸ்லோகம்

ஸ்ரீ குருப்யோ நம : ||

## ஸ்ரீ சந்த்ர சேகர ஸரஸ்வதி நாம கீர்த்தனம்

ஸிந்து பைரவி ஆதிதாளம்

ப அனுராத நக்ஷத்ரே ஜனித ஜகத்குரு
ஸர்வேஜனா : வாஞ்சித ஸத்குரு

அப ஏகாந்த ஜபித ஏகாம்ப்ரேச தாஸ
ஏனாத்தூர் வித்யாபீட ஸ்தாபித போஷித

ச காஞ்சி க்ஷேத்ரே வாஸித தவச்ரேஷ்ட
காமாக்ஷி தாஸ காமகோடி பீடாதீச
சந்த்ர சேகர ஸரஸ்வதி முனீந்த்ர
ஸந்ததம் பாலய ஸத்குரு தாஸான்

சமர்ப்பணம்







திருவெண்காடு ஸீதாராம வாஸுதேவ
ஆன்மீக சங்கம்

சென்னை - 600 061

ஸ்ரீ அர்த்த நாரீஸ்வராய நம:
ஸ்ரீ சாந்தி துர்கா துணை

# ஸ்தல வரலாறு

சென்னை நங்கைநல்லூர் திவ்யக்ஷேத்திரத்தின் நான்காவது பிரதான சாலையில் அமைந்துள்ளது ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரர் ஆலயம்.

ஸ்ரீ காஞ்சி காம கோடி பீடாதிபதி ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி ஸ்வாமிகள் 1966-ம் ஆண்டு நங்கைநல்லூருக்கு விஜயம் செய்த தருணத்தில் குளக்கரை இடிபாடு களிலிருந்து ஒரு சிவலிங்கத்தைக் கண்டார். இந்த சிவலிங்கம் ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரர் என்றும் தெரிவித்தார். ஸ்ரீ ஜகத்குரு கட்டளையின்படி ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரர், ஸ்ரீபால கணபதி, ஸ்ரீ பால சுப்ரமணியருடன் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு 5-9-1971ல் அஷ்டபந்தன மஹா கும்பாபிஷேகம் செய்யப்பட்டது. இந்த ஆலயம் மேலும் மேலும் வளர்ந்து மற்ற மூர்த்திகளும் ப்ரதிஷ்டை செய்யப்பட்டு விரிவடைந்துள்ளது.

இந்த ஆலய வளாகத்தின் பின்பகுதியில் 6 1/2 அடி உயரம் உள்ள ஸ்ரீ அஷ்ட புஜ சாந்தி துர்கை பிரதிஷ்டை செய்யப்பட்டு 22.1.1988 அன்று அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

ஆலயத்தின் கர்ப்பக்ருஹத்தை ஆகம சாஸ்திரப்படி அமைத்து புதிதாக ஸ்ரீ அர்த்த நாரீஸ்வரிக்கும் (பாகம் பிரியாளுக்கும்) மற்ற புதிய மூர்த்திகளுக்கும் ஸன்னதிகள் அமைத்து 28.6.1996 அன்று அஷ்டபந்தன ஜீர்ணோத் தாரண மஹா கும்பாபிஷேகம் நடைபெற்றது.

ஸ்ரீ அஷ்ட புஜ சாந்தி துர்க்கையின் கர்ப்பக்ருஹம் தேர் வடிவில் அமைக்கப்பட்டு முன் மண்டபம் விசாலமானதாக பக்தர்கள் கூடி பிரார்த்தனை செய்வதற்கு ஏற்றதாக அமைந்து உள்ளது. துர்கைக்கு சந்தன காப்பும் மஞ்சள் காப்பும்

சாற்றியும் மூன்று வடத்தில் லலிதா சஹஸ்ர நாம காசு மாலையும் அணிவித்தும் தரிசிப்பது கண் கொள்ளா காட்சியாகும். தேவியின் குளிர்ந்த பார்வை யாவரையும் ஈர்க்கிறது.

தேவியிடம் விவாஹமோ, உத்தியோகமோ அல்லது உடல்நல சம்பந்தப்பட்ட விஷயங்களோ எதுவானாலும் வேண்டிக்கொண்ட கோரிக்கைகளை உடனடியாக நிறைவேற்றி அருள் பாலிக்கிறாள்.

பக்தர்களும், கோரிக்கைகள் நிறைவேறப்பெற்றவர் களும் அம்பாளுக்கு புடவைகளையும், ஆபரணங்களை யும் புஷ்ப மாலைகளையும் வாங்கி அணிவித்து மகிழ்ச்சியடைகின்றனர்.

நங்கை நல்லூர் சாந்தி துர்கா ஸுவாசினி மண்டலியினர் விழாக்காலங்களில் விசேஷ பூஜைகளுக்கு ஏற்பாடு செய்வதுடன் பிரதி ஞாயிறு, செவ்வாய்க்கிழமை யும் இராகு கால பூஜையும், பௌர்ணமி அன்று அபிஷேக ஆராதனையும் நவராத்திரி ஒன்பது நாட்களிலும் தவிர ஆடிப்பூரத்து அன்றும் விசேஷ பூஜைகளுக்கு ஏற்பாடு செய்து சிறப்பாக கொண்டாடுகின்றனர். பக்தர்கள் பெருமளவில் கூடி லலிதா சஹஸ்ர நாம பாராயணம் செய்து பக்தி பாடல்கள் பாடி மகிழ்வது எல்லா உள்ளங் களுக்கும் பேரின்பத்தைக் கொடுக்கிறது.

ஸ்ரீ அர்த்த நாரீஸ்வரரும், ஸ்ரீ அஷ்ட புஜ சாந்தி துர்கையும் பக்தர்களுக்கு சகல ஸௌபாக்யங்களையும் அளித்து அருள் பாலிக்கின்றார்கள்.

நாம் அவர்கள் புகழ் பாடி இம்மையிலும் மறுமையிலும் பேரின்பம் அடைவோமாக!



# பொருளடக்கம்

# பொருளடக்கம்

# பொருளடக்கம்

## ஸ்ரீ விநாயகர் துதி

கைத்தல நிறைகனி அப்பமோட வல்பொரி
கப்பிய கரிமுகன் அடிபேணி
'கற்றிடும்' அடியவர் புத்தியில் உறைபவர்
"கற்பகம்" எனவினை கடிதேகும் !
மத்தமும் மதியமும் வைத்திடும் அரன்மகன்
மற்பொரு திரள்புய மதயானை
மத்தள வயிறனை உத்தமி புதல்வனை
மட்டவிழ் மலர்கொடு பணிவேனே
முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்
முற்பட எழுதிய முதல்வோனே
முப்புரம் எரிசெய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடிசெய்த அதிதீரா!
அத்துயர் அதுகொடு சுப்பிர மணிபடும்
அப்புனம் அதனிடை இபமாகி
அக்குற மகளுடன் அச்சிறு முருகனை
அக்கணம் மணமருள் பெருமாளே !

## ஸ்ரீ கணநாதனே நமோ நமோ

ஸ்ரீகண நாதனே நமோ நமோ
ஜயகண நாதனே நமோ நமோ
சங்கரி பாலனே நமோ நமோ
சரணம் ஐங்கரனே நமோ நமோ
மூல முதல்வனே நமோ நமோ
மோதகப்பிரியனே நமோ நமோ
கரிமுகத் தழகனே நமோ நமோ
கருணாகரனே நமோ நமோ

# கணேச சரணம்

கணேச சரணம் சரணம் கணேசா
கணேச சரணம் சரணம் கணேசா
கணேச சரணம் சரணம் கணேசா
மூஷிக வாகன சரணம் கணேசா
மோதக ஹஸ்த சரணம் கணேசா
வாமன ரூபா சரணம் கணேசா
மகேஸ்வர புத்ர சரணம் கணேசா (கணேசா)

ஆனை முகத்தோனே சரணம் கணேசா
பார்வதி புத்ர சரணம் கணேசா
பக்த ஜனப்பிரிய சரணம் கணேசா
ஐங்கையுள்ளோனே சரணம் கணேசா
ஐயப்ப சோதரனே சரணம் கணேசா (கணேசா)

தும்பிக்கையுள்ளோனே சரணம் கணேசா
துன்பங்களை தீர்ப்பவனே சரணம் கணேசா (கணேசா)

மூலப் பொருளே சரணம் கணேசா
முழுமுதற் கடவுளே சரணம் கணேசா
கொழுக் கட்டை உண்போனே சரணம் கணேசா
கேட்டவரம் அளிப்போனே சரணம் கணேசா (கணேசா)

பழங்கள் உண்போனே சரணம் கணேசா
பாவங்களை தீர்ப்பவனே சரணம் கணேசா
பானை வயிற்றோனே சரணம் கணேசா
பாலர்களை காப்பவனே சரணம் கணேசா (கணேசா)

பிள்ளையார் பிள்ளையார் பெருமை வாய்ந்த பிள்ளையார்
பிள்ளையார் பிள்ளையார் அருளை தரும் பிள்ளையார்
ஆற்றங்கரை ஓரத்திலே அரசமரத்து நிழலிலே
வீற்றிருக்கும் பிள்ளையார் வினையை தீர்க்கும் பிள்ளையார்
(பிள்ளையார்)

ஆறுமுக வேலவனின் அண்ணனான பிள்ளையார்
நேரும் துன்பம் யாவையும் நீக்கிவைக்கும் பிள்ளையார்
(பிள்ளையார்)

மஞ்சளிலே செய்திடினும் மண்ணினாலே செய்திடினும்
ஐந்தெழுத்து மந்திரத்தை நெஞ்சில் நாட்டும் பிள்ளையார்
(பிள்ளையார்)

சங்கரனின் புதல்வனாம் சாத்திரத்தில் முதல்வனாம்
சகலத்திற்கும் மூலவனாம் சக்தி வாய்ந்த பிள்ளையார்
(பிள்ளையார்)

ஆனைமுகம் கொண்டவர் ஐந்து கரங்கள் உடையவர்
பானை வயிறும் படைத்தவர் பக்தர் துயரைத் தீர்ப்பவர்
(பிள்ளையார்)

பாஹி பாஹி கஜானனா
பார்வதி புத்ர கஜானனா
மூஷிக வாஹன கஜானனா
மோதக ஹஸ்தா கஜானனா
சாமர கர்ண கஜானனா
விளம்பித சூத்ர கஜானனா (பாஹி பாஹி)

வாமன ரூப கஜானனா
மஹேச்வர புத்ர கஜானனா
விக்ன விநாயக கஜானனா
(தவ) பாத நமஸ்தே கஜானனா (பாஹி பாஹி)

ஜய கணேச ஜய கணேச ஜய கணேச பாஹிமாம்
ஸ்ரீகணேச ஸ்ரீகணேச ஸ்ரீகணேச ரக்ஷமாம்

பிள்ளையார் பிள்ளையார் - அவர்
எங்கெங்கும் பிள்ளையார்
அங்கெங்கும் போய்ப் பார்த்தோம் - அவர்
எங்கெங்கும் பிள்ளையார் (பிள்ளையார்)

ஆற்றங்கரையிலே அரசாள்கிறார் பிள்ளையார்
அங்கெங்கும் போய்ப் பார்த்தோம் - அவர்
எங்கெங்கும் பிள்ளையார் (பிள்ளையார்)

குளத்தங்கரையில் கொண்டாடுகிறார் பிள்ளையார்
அங்கெங்கும் போய்ப் பார்த்தோம் - அவர்
எங்கெங்கும் பிள்ளையார் (பிள்ளையார்)

ஊரெங்கும் பிள்ளையார் - உகந்தாடுகிறார் பிள்ளையார்
அங்கெங்கும் போய்ப் பார்த்தோம் - அவர்
எங்கெங்கும் பிள்ளையார் பாரெங்கும் பிள்ளையார்
பரிபூரணமாம் பிள்ளையார் (அவர்) (பிள்ளையார்)

கலைநிறை கணபதி சரணம் சரணம்
கஜமுக குணபதி சரணம் சரணம்
தலைவனின் இணையடி சரணம் சரணம்
சரவண பவகுஹ சரணம் சரணம்
சிலைமலை யுடையவர் சரணம் சரணம்
சிவ சிவ சிவ சிவ சரணம் சரணம்
உலாவரு மொருபரை சரணம் சரணம்
உமைசிவை அம்பிகை சரணம் சரணம்

கஜமுக கஜமுக கணநாதா
ஸீரமுனி வந்தித குணசீலா
கஜமுக கஜமுக கணநாதா
ஸுரநர வந்தித குணநீதா

கௌரீ நந்தன கஜானனா
கிரிஜா நந்தன நிரஞ்ஜனா
பார்வதி நந்தன சுபானனா
பாஹிப்ரபோ மாம்பாஹி ப்ரஸன்னா (பாஹி பாஹி)

## ப்ரபோ கணபதே

ப்ரபோ கணபதே பரிபூரண
வாழ்வருள் வாயே - ப்ரபோ

சார்ந்து வணங்கி துதிபாடி ஆடி
உந்தன் சன்னதி சரணடைந்தோமே
சாந்த சித்த சௌபாக்கியம் யாவையும்
தந்தருள் சற்குரு நீயே - ப்ரபோ

ஆதிமூல கணநாத கஜானனா
அற்புத தவள ஸ்வரூபா
தேவ தேவ ஜெய விஜய விநாயகா
சின்மய பர சிவ தீபா - ப்ரபோ

தேடி தேடி எங்கோ ஓடுகின்றார் - உன்னை
தேடி கண்டு கொள்ளலாமே

கோடி கோடி மத யானைக்கு பணி செய்ய
குன்றென விளங்கும் பெம்மானே - ப்ரபோ

ஞான வைராக்ய விசார சார ஸ்வர
ராக லய நடன பாதா
நாம பஜன குண கீர்த்தன நவநீதா
நாயக ஜெய ஜெகன்னாதா - ப்ரபோ

பார்வதி பால அபார ராவ வர
பரம பகல பல கரணா
பக்தஜன சுமுக ப்ரணவ
விநாயக பாவன பரிமள சரணா - ப்ரபோ.

உ

ஓம் நமச்சிவாய

## சிவ நாமாவளி

சம்போ சங்கர உமாபதே
சாம்ப சுந்தர பசுபதே
நந்திவாஹன நாகபூஷண
சந்திரசேகர ஜடாதரா
கங்காதாரா கௌரிமனோகர
கிரிஜா காந்தா சதாசிவா (சம்போ)

கைலாச வாஸா கனகஸபேசா
சுந்தர குஞ்சித நடராஜா
மசான வாசா சிதம்பரேசா
நீலகண்டா மகாதேவா
தேஜோரூபா ஜோதிப்ரகாசா
விபூதிசுந்தர விச்வேசா
வ்ருஷபாரூட வாமதேவா
பார்வதிரமண பரமேசா (சம்போ)

சூலாதாரா த்ரிமூர்த்திரூபா
வ்யோமகேசா சர்வேசா
ஸ்வயம்ப்ரகாசா அர்த்தநாரீசா
பாகம்பிரியாள்ப்ராணேசா (சம்போ)

## நமச்சிவாய ஸ்தோத்திர மாலை

சிவாயநம என்று சிந்தித்திருப்போருக்கு
அபாயம் ஒரு நாளும் இல்லை
சித்தமதை நிலைநிறுத்தி சிவநாமம் சொல்பவர்க்கு
சங்கடங்கள் என்றென்றுமில்லை.

ஓம்நமோ நமச்சிவாய ஓம் நமோ நமச்சிவாய
ஓம்நமோ நமச்சிவாய ஓம் நமோ நமோ
ஓம்நமோ நமச்சிவாய் ஓம் நமோ நமச்சிவாய
ஓம்நமோ நமச்சிவாய் ஓம் நமோ நமோ

1. ஆதியாயனாதியாகி ஆதிமூலம் பொருளுமாகி
ஆவின் நிழலில் அமைதி கண்ட ஆதிமூலமே ஓம் நமோ

2. ஸனகாதி முனிவர்களுக்கு ஸம்ஞையாலே தத்துவம் காட்டி
ஸகல லோக பூஜியனான ஸாம்ப மூர்த்தியே ஓம் நமோ

3. ஆனைமுகன் ஆறுமுகன் ஆதிசக்தி அம்மையுடன்
ஆனந்தமாய் பவனி வரும் ஆதி ஜோதியே ஓம் நமோ

4. ஆனந்த தாண்ட புரந்தனிலே மாமுனிக்கு
ஆருத்ரையில் நடனம் செய்த ஆசுதோஷியே ஓம் நமோ

5. மழலை பேசும் முருகனுடன் மந்திரார்த்த தத்துவம்கேட்டு
மகனுக்கு சீடனான மாயாதீதனே ஓம் நமோ

6. சோமயாஜீ பக்திதனை சோதித்து முக்தி தர
சண்டாளனாய் நேரில் வந்த சித்ஸபேசனே ஓம் நமோ

7. எண்ணிரண்டு பிராயங்கொண்ட ஏக புத்ர மார்க்கண்டனை
என்றும் பதினாறாய் செய்த ஏக நாதனே ஓம் நமோ

8. வேட்டைகார வேடங்கொண்டு வில்லம்பு அடியும்பட்டு
விஜயனுக்கு அஸ்திரம் தந்த வேத வேத்யனே ஓம் நமோ

9. வைகையில் அணையைக் கட்ட வேலைக்காளை தேடி நிறை
வாணியச்சி பிட்டைத்தின்ற வேத பூஜியனே ஓம் நமோ

10. பிட்டுக்கு மண்சுமந்து பிரம்பாலன்று அடியும்பட்டு
பக்தை துயர் போக்கடித்த பூர்ண ரூபனே ஓம் நமோ

11. மலைதனிலே முருகனுடன் மழலைபேசி விளையாடி
மலைமகளை மகிழ செய்த மகாதேவனே ஓம் நமோ

12. தாயுதவி நாடி நின்று தத்தளித்த பெண்மணிக்கு
தாயாகி அறையில் வந்த தாயுமானவர் ஓம் நமோ

13. சின்னஞ்சிறு சம்பந்தனுக்கு சக்தியுடனே பாலுமூட்டி
சிவஞானம் மேலும் தந்தஸத்ரூபனே ஓம் நமோ

14. ஆழ்கடலில் பொங்கி வந்த ஆலகால விஷத்தை உண்டு
ஆர்வமுடன் அவனிகாத்த ஆதி தெய்வமே ஓம் நமோ

15. நாளதனைப் பாழாக்கி நலிந்து வாழும் மக்களுக்கு
நற்கதியைக் காட்ட வந்த நடராஜனே ஓம் நமோ

16. ஆணவத்தை அழித்து எனை அனவரதம் நாமம் சொல்ல
ஆசிதனைச் செய்ய வேண்டும் ஆத்மநாபனே ஓம் நமோ

17. அங்கு மிங்கும் ஓடியாடி அல்லல் தரும் மனக்குரங்கை
அடக்கியாட் கொள்ள வேண்டும் ஆர்ய பூஜனே ஓம் நமோ

18. காலதேவன் வரும் நேரம் கண்கலங்கச் செய்திடாமல்
காளைமீதில் வரவேண்டும் கால காலனே ஓம் நமோ

கலியுகத்தில் ஸம்ஸார ஸாகரத்தில் தத்தளிக்கும் மக்கள் அனைவரும் பிறவிப்பயன் எய்தி பேரின்பமடைய தினந்தோறும் காலை மாலை மேற்படி நமச்சிவாய ஸ்தோத்திர மாலையை பக்தியுடன் பாராயணம் செய்ய வேண்டியது. ஒரு முறை பாராயணம் செய்தால் 108 தடவை நமச்சிவாய என்னும் பஞ்சாக்ஷர மஹா மந்திரம் சொல்லப்படுகிறது.

## அர்த்தநாரீ ஸ்தோத்திரம்

நம: சிவாயை ச நம: சிவாய!
நம: சிவாயை ச நம: சிவாய!
நம: சிவாயை ச நம: சிவாய!
நம: சிவாயை ச நம: சிவாய!

சாம்பேய கௌரார்த்த சரீரகாயை!
கர்பூர கௌரார்த்த சரீரகாய!
தம்மில்ல காயை ச ஜடாதராய
நம: சிவாயை ச நம: சிவாய!

கஸ்தூரிகா குங்குமசர்சிதாயை
சிதாரஜ புஞ்ச விசர்சிதாய!
க்ருதஸ்மராயை விக்ருதஸ்மராய
நம: சிவாயை ச நம: சிவாய!

ஜ்வணத் க்வணத் கங்கண நூபுராயை
பாதாப்ஜ ராஜத் பணி நூபுராய!
ஹேமாங்க தாயை புஜகாங்கதாய
நம: சிவாயை ச நம: சிவாய!

விசால நீலோத்பல லோசனாயை
விகாஸி பங்கேருஹ லோசனாய
ஸமேக்ஷணாயை விஷமேக்ஷணாய
நம: சிவாயை ச நம: சிவாய!

மந்தார மாலா கலிதாலகாயை
கபால மாலாங்கித கந்தராய
திவ்யாம்பராயை ச திகம்பராய
நம: சிவாயை ச நம: சிவாய!

அம்போதர ச்யாமள குந்தலாயை
தடித் ப்ரதாம்ர ஜடாதராய
நிரீஸ்வராயை நிகிலேஸ்வராய
நம: சிவாயை ச நம: சிவாய!

ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியுன்முக லாஸ்யகாயை
ஸமஸ்த ஸம்ஹாரக தாண்டவாயை!
ஜகத் ஜனன்யை ஜகதேக பித்ரே
நம: சிவாயை ச நம: சிவாய!

ப்ரதீப்த ரத்னோ ஜ்வல குண்டலாயை
ஸ்புரன் மஹா பன்னக பூஷணாய!
சிவான் விதாயை ச சிவான் விதாய
நம: சிவாயை ச நம: சிவாய!

ஏதத் படேதஷ்டக மிதம் யோ
பக்த்யா ஸ மான்யோ புவி தர்திஜீவி
ப்ராப்னோதி சௌபாக்ய மனந்தகாலம்
பூயாத் ஸதா தஸ்ய ஸமஸ்த ஸித்தி!

இதி ஸ்ரீமத் பரமஹம்ஸ
பரிவ்ரஜகாசார்யஸ்ய
ஸ்ரீ கோவிந்த பகவத் பூஜ்ய
பாத சிஷ்யஸ்ய ஸ்ரீமத்
சங்கர பகவத் ம்ருதோ
ஸ்ரீ அர்த்தநாரீ ஸ்தோத்ரம் சம்பூர்ணம்

## ஆத்ம ஷட்கம்

*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

மனோ புத்தி யஹங்கார சித்தானி நாஹம்
நஸ் ஸ்ரோத்ர ஜீவ்ஹே நசேத்ராணநேத்ரே
நஸ் வ்யோம பூமிர் நதேஜோ நவாயு:
*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

ந ப்ராண சமக் ஞோர் நவை பஞ்ச வாயு:
நவா சப்த தாதுர் நவாபஞ்சகோசா:
நவாக்பாணி பாதம் நசோ பஸ்தாவாயூ
*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

நமே த்வேஷ ராகௌ நமே லோப மோஹௌ
நமே வை மதோ நைவ மாத்சர்யபாவ:
நதர்மோ நசார்த்தோ நகாமோ நமோக்ஷ:
*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

நபுண்யம் நபாபம் நசௌக்யம் நதுக்கம்
நமந்த்ர ரௌ நதீர்த்தம் நவேதோ நயக்ஞ:
அஹம் போஜனம் நைவ போஜ்யம் நபோக்தா
*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

நம்ருத்யுர நசங்கா நமே ஜாதி பேத:
பிதா நைவ மாதா நஜன்ம
நபந்துர் நமித்ரம் குருர நைவ சிஷ்ய:
*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

அஹம் நிர்வி கல்போ நிராகார ரூப:
விபுத் வாஸ்ச சர்வத்ர சர்வேந்த்ரியாணாம்
நசா சங்கதம் நைவ முக்திர் நக்ஞேய:
*சிதாநந்தரூப : சிவோஹம் சிவோஹம்*

## ஸ்ரீ சுப்ரமணியர்

சுப்ரமணியம் சுப்ரமணியம் ஷண்முகநாதா சுப்ரமண்யம்
சுப்ரமண்யம் சுப்ரமணியம் ஷண்முகநாதா சுப்ரமண்யம்
சிவ சிவ சிவ சிவ சுப்ரமண்யம்

ஹர ஹர ஹர ஹர சுப்ரமண்யம்
சிவ சிவ ஹர ஹர சுப்ரமண்யம்
ஹர ஹர சிவ சிவ சுப்ரமண்யம்
சிவ சரவணபவ சுப்ரமண்யம்
குரு சரவணபவ சுப்ரமண்யம்
சிவ சிவ ஹர ஹர சுப்ரமண்யம்
ஹர ஹர சிவ சிவ சுப்ரமண்யம்

## முருகா உன்னை

வேல் வேல் முருகா வேலய்யா
வெற்றிவேல் முருகா வேலய்யா

முருகா உன்னை அழைக்கின்றேன்
முத்தமிழ் பாடித் துதிக்கின்றேன்
மருகா உன்னை அழைக்கின்றேன்
மறைகள் பாடித் துதிக்கின்றேன் (வேல்)

கந்தா உன்னை அழைக்கின்றேன்
கவசம் பாடித் துதிக்கின்றேன்
மன்னா உன்னை அழைக்கின்றேன்
மந்திரம் பாடித் துதிக்கின்றேன் (வேல்)

வேலா உன்னை அழைக்கின்றேன்
விருத்தம் பாடித் துதிக்கின்றேன்
மாலா உன்னை அழைக்கின்றேன்
மயிலைப் பாடித் துதிக்கின்றேன் (வேல்)

சண்முகா உன்னை அழைக்கின்றேன்
சரவணன் பாடித் துதிக்கின்றேன்
கண்ணின் மணியை அழைக்கின்றேன்
காவியம் பாடி துதிக்கின்றேன் (வேல்)

## எத்தனை அபிஷேகம்

எத்தனை அபிஷேகம் எத்தனை அபிஷேகம்
எங்கள் முருகனுக்கு
சூரனை வென்ற சண்முக வேலனுக்கு
எத்தனை அபிஷேகம் (எத்தனை)

பச்சை மயில் வாகனன் பன்னிருகை வேலனுக்கு
எத்தனை அபிஷேகம்
பச்சிளங்குழந்தைக்கு பாலென்றும் கிடைத்திட
பால் கொண்டு அபிஷேகம் (எத்தனை)

கள்ளழகர் மருகன் உள்ளங்கவர் கள்வனுக்கு
எத்தனை அபிஷேகம்
கணவனும் மனைவியும் இணைந்தே வாழ்ந்திட
தயிர் கொண்டு அபிஷேகம் (எத்தனை)

இளமங்கை வள்ளி தனைக்கைபிடித்த விருத்தனுக்கு
எத்தனை அபிஷேகம்
இளையதலை முறையின் பழமொழி பொய்த்திட
இளநீர் அபிஷேகம் (எத்தனை)

மாம்பழம் வேண்டி மலைதனில் நின்றவனுக்கு
எத்தனை அபிஷேகம்
மழைத்துளி விழுந்து மண்ணும் குளிர்ந்திட
பன்னீர் அபிஷேகம் (எத்தனை)

தேவமகள் யானைதனைக் கைபிடித்த வீரனுக்கு
எத்தனை அபிஷேகம்
தஞ்ச மடைந்தவர் பஞ்சம் தீர்ந்திட
பஞ்சாமிர்த அபிஷேகம் (எத்தனை)

சந்தங்கள் பாட சதிராடும் சாமிக்கு
எத்தனை அபிஷேகம்
சந்ததிகள் வந்திட சந்தானம் பொங்கிட
சந்தன அபிஷேகம் (எத்தனை)

உலகமெங்கும் ஆளும் உத்தமச் செல்வனுக்கு
எத்தனை அபிஷேகம்
உள்ளும் புறமும் பிணிகள் நீங்கிட
திருநீர் அபிஷேகம் (எத்தனை)

## ஒயிலாட்டம்

கந்தனுக்கு வேல் வேல்
முருகனுக்கு வேல் வேல் (கந்தனுக்கு)

பச்சை மயில் வாகனம்
பச்சை வள்ளி மோகனம்
கச்சை கட்டி ஆடுங்கடி ஒயிலாட்டம்
கால்மாறி ஆடுங்கடி ஒயிலாட்டம் (கந்தனுக்கு)

தேவயானை கண்ணரசி
தேவேந்திரன் பெண்ணரசி
பூமகளின் மருமகளே ஒயிலாட்டம்
புண்ணியத் தவசீலன் மயிலாட்டம் (கந்தனுக்கு)

பச்சை மலை பவளமலை
இச்சை மலை பழனிமலை
இன்பமலை எமது நிலை ஒயிலாட்டம்
ஏகபோக தரிசனமாம் மயிலாட்டம் (கந்தனுக்கு)

தங்க புள்ளி அங்கமது
தாவித் தாவி ஆடுவது
எங்களது முருகனுக்கு ஒயிலாட்டம்
எல்லையற்ற பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கு)

கொண்டை குலுங்குதடி
கூவியே ஆடுதடி
மண்டலமே மயங்குதடி ஒயிலாட்டம்
மாலவனும் மயங்குகின்ற மயிலாட்டம் (கந்தனுக்கு)

முத்து நகை மோக நகை
பித்து நகை பெரிய நகை
சித்துகளாம் செந்திலவன் ஒயிலாட்டம்
சிங்கார வேலனுக்கு மயிலாட்டம் (கந்தனுக்கு)

குலுங்கிச் சிரிக்குமிந்தக்
குழந்தை ஏறி நின்று
அலுங்காமல் ஆடுதய்யா ஒயிலாட்டம்
ஆனந்தக் காட்சியம்மா மயிலாட்டம் (கந்தனுக்கு)

சலங்கை குலுங்குதம்மா
சங்கீதம் பாடுதம்மா
நலுங்காமல் ஒலிக்குதம்மா ஒயிலாட்டம்
நாயகனின் பேரருளே மயிலாட்டம் (கந்தனுக்கு)

உடம்புக்குள் ஆடுவதும்
உயிராக கூடுவதும்
கடம்பனின் பேரருளே ஒயிலாட்டம்
கந்தனின் பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கு)

விராலி மலை பழனி மலை
விரும்புகின்ற ஆறுபடை
வெற்றியுடன் ஆடுகின்ற ஒயிலாட்டம்
வேண்டும் வரம் தந்திடுமே மயிலாட்டம் (கந்தனுக்கு)

பன்னீர்மணக்குதய்யா
கண்ணீர் பெருகுதய்யா
எந்நேரம் நீ வருவாய் ஒயிலாட்டம்
எல்லையிலாப் பேரழகே மயிலாட்டம் (கந்தனுக்கு)

சிந்துகளோ செந்தூர
முத்துக்களோ பக்தர்களோ
வந்து வந்து ஆடுகின்றான் ஒயிலாட்டம்
வரம் தரவே கூடுகின்றான் மயிலாட்டம் (கந்தனுக்கு)

தந்தனத்தான பாடுகின்றான்
தாளமிட்டு ஆடுகின்றான்
கந்தனவன் ஆடுகின்றான் ஒயிலாட்டம்
கற்பனையை பாடுங்களே மயிலாட்டம் (கந்தனுக்கு)

## பச்சை மயில் வாகனனே

பச்சை மயில் வாகன சிவ பால சுப்ரமணியனே வா
எந்தன் இச்சை யெல்லாம் உந்தன் மீதே
வாழ்வில் எள்ளளவும் பயமில்லையே (பச்சை)

மருத மலையாண்டவனே எங்கள் மனம் குளிர
வந்தாயே (எந்தன்....) (பச்சை)

கொச்சை மொழியானாலும் உன்னைக் கொஞ்சி
கொஞ்சிப் பாடுவேன்
எந்தன் சர்ச்சை யெல்லாம் அகன்றதப்பா, எங்கும்
சாந்தி நிலவுதப்பா (பச்சை)

பள்ளம் மேடு எதுவாகிலும் முருகா பாயும் நீரின்
தன்மையது போல் நீ
எந்தன் உள்ளத்தில் மெல்ல மெல்ல புகுந்து விட்டாய்
எந்தன் கள்ளமெல்லாம் கரையுதப்பா (பச்சை)

நெஞ்சமெனும் கோவிலமைத்து அதில் நேர்மையெனும்
தீபம் வைத்தேன்
செஞ்சிலம்பு கொஞ்சிடவே வாவா சேவல் கொடிமயில் வீரா
(பச்சை)

அலைகடல் ஓரத்திலே எங்கள் அன்பான சண்முகனே நீ
அலை அலையாய் வரம் தருவாய் - உனக்கு
அனந்தகோடி நமஸ்காரம் (பச்சை)

நாத விந்து கலாதீ நமோ நம
வேத மந்திர சொரூப நமோ நம
ஞான பண்டித சுவாமி நமோ நம (வெகு கோடி)
நாமசம்பு குமாரா நமோ நம
போக அந்தரி பாலா நமோ நம
நாக பந்தமயூரா நமோ நம (பரசூரர்)
சேத தண்ட விநோதா நமோ நம
கீத கிண்கிணி பாதா நமோ நம
தீர சம்ப்ரம வீரா நமோ நம (கிரிராஜ)
தீப மங்கள ஜோதி நமோ நம
தூய அம்பல லீலா நமோ நம
தேவ குஞ்சரி பாகா நமோ நம (அருள் தாராய்)

ஈதலும் பல கோலாகல பூஜையும்
ஏதலுங்குண ஆசார நீதியும்
ஈரமுங்குரு சீர்பாத சேவையும் (மறவாத)

ஏழ்தலம் புகழ் காவேரியால் விளை
சோழ மண்டல மீதே மனோகர
ராஜ கம்பீர நாடாளு நாயக (வயலூரா)

ஆதரம் பயிலாரூரர் தோழமை
சேர்தல் கொண்டவரோட முனாளினில்
ஆடல் வெம்பரி மீதேறி (மா கயிலையிலேகி)

ஆதியந்தவுலா வாசு பாடிய
சேரர் கொங்கு வைகாவூர் நாடதில்
ஆவினங்குடி வாழ்வான தேவர்கள் (பெருமானே)

## முருகன் பாட்டு

பால் மணக்குது பழம் மணக்குது பழனி மலையிலே
பள்ளிக்கட்டு நெய் மணக்குது சபரிமலையிலே
திருநீற்றின் நறுமணமாம் பழனி மலையிலே
இருமுடியின் ஒளிமயமாய் சபரி மலையிலே (பால்)

காவடிகள் ஆடுவதும் பழனி மலையிலே
தாளங்கள் போடுவதும் சபரிமலையிலே
கார்த்திகை திருவிளக்கு பழனி மலையிலே
கார்த்திகை நடைதிறப்பு சபரிமலையிலே (பால்)

சரவணமாம் பொய்கை கண்டோம் பழனிமலையிலே
சரணத்தின் எல்லை கண்டோம் சபரிமலையிலே
ஆறுபடை சிறப்பெல்லாம் பழனிமலையிலே
ஆறுகளின் சிறப்பெல்லாம் சபரிமலையிலே (பால்)

வேலோ வினையோடும் பழனிமலையிலே
வில்லாட நோயோடும் சபரிமலையிலே
தேன் மணக்குது தினைமணக்குது பழனிமலையிலே
தேங்காயோடு நெய்மணக்குது சபரிமலையிலே (பால்)

அரோகரா அரோகரா பழனிமலையிலே
அய்யன் சரணம் அய்யன் சரணம் சபரிமலையிலே (பால்)

## கார்த்திகை தீபம்

கார்த்திகை தீபம் முருகனுக்கு
மகர ஜோதி ஐயனுக்கு
காவடி ஆட்டம் பழனியிலே
இருமுடிக் கூட்டம் சபரியிலே
அரகர முருகா வேல் முருகா
சாமியே சரணம் ஐயப்பா (கார்த்திகை)

சரவணப் பொய்கையில் பிறந்தவன் முருகன்
பம்பைக் கரையிலே ஐயன் பிறந்தான்
பழனியிலே பஞ்சாமிர்தமாம்
சபரியிலே தேனமுதமாம்
அரகர முருகா வேல் முருகா
சாமியே சரணம் ஐயப்பா (கார்த்

முருகன் கையில் வேலுண்டு
ஐயப்பன் கையில் வில்லுண்டு
பாலாபிஷேகம் பழனியிலே
நெய்யபிஷேகம் சபரியிலே
அரகர முருகா வேல் முருகா
சாமியே சரணம் ஐயப்பா (கார்த்திகை)

பழமுதிர் சோலையில் மயில் ஆடும்
சபரி காட்டில் புலி ஓடும்
சூரனை வென்றான் வடி வேலன்
மகிஷியைக் கொன்றான் மணிகண்டன்
அரகர முருகா வேல் முருகா
சாமியே சரணம் ஐயப்பா (கார்த்திகை)

அறுபடை வீடு முருகனுக்கு
பதினெட்டு படி எங்கள் ஐயப்பனுக்கு
அருணகிரி வணங்கும் முருகனாம்
எங்கள் கண்ணப்பன் வணங்கும் ஐயப்பன்
அரகர முருகா வேல் முருகா
சாமியே சரணம் ஐயப்பா (கார்த்திகை)

## ஸ்ரீ சரஸ்வதி ஸ்துதி

மாணிக்க வீணை ஏந்தும் மாதேவி கலைவாணி
தேன் தமிழ்ச் சொல்லெடுத்து பாடவந்தோம் அம்மா
பாட வந்தோம்
அருள்வாய் நீ இசைதருவாய் நீ இங்கு வருவாய் நீ நலம்
தரவே நீ அம்மா
(மாணிக்க)

நாமணக்கப்பாடி நின்றால் ஞானம் வளர்ப்பாள்
பூமணக்கப் பூஜைசெய்தால் பூவை நீ மகிழ்வாய்
(மாணிக்க)

வெள்ளைத் தாமரையில் வீற்றிருப்பாள் - எங்கள்
உள்ளக் கோவிலிலே உறைந்து நிற்பாள்
கள்ளமில்லாமல் தொழும் அன்பருக்கே என்றும்
அள்ளி அறிவைத்தரும் அன்னையும் நீ
வாணி சரஸ்வதி மாதவி பாரதி பாகதீஸ்வரி மாலினி
காணும் பொருளில் தோன்றும் கலைவாணி

வேண்டும் வரம் தரும் வேணி
நான் முகன் நாயகி மோகன ரூபிணி
நான் மறைபோற்றும் தேவி நீ
வானவர்க்கமுதே தேனருள் சிந்தும் ஞான மனோகரி கல்யாணி
அருள்வாய் நீ இசை தருவாய் நீ இங்குவருவாய் நீ
நலம் தரவே நீ அம்மா (மாணிக்க)

## கல்வி அரசி

கல்வி அரசி கலைமகளே
கலை கட்கதிபதி ஆனவளே
வெண்கலை தனையே தரித்தவளே
வெண் தாமரை மீது அமர்ந்தவளே ! (கல்வி)

முத்தாரம் தனை அணிந்தவளே
முத்தமிழ் ஞானம் அணிந்தவளே
நான்முகன் நாவில் உறைபவளே
நால் வகை கலைகள் உணர்ந்தவளே ! (கல்வி)

கனிகள் தேங்காய் அவல் கடலை
கற்கண்டு வெற்றிலை பாக்குடனே
வாணி நின்னருள் வேண்டி நின்றோம்
வரமே தந்திட வேண்டுமம்மா !

## ஸ்ரீ லக்ஷ்மி துதி

தாமரைப்பூவில் அமர்ந்தவளே - செந்தாமரைப்பூவில் அமர்ந்தவளே
செந்தூரத்திலகம் அணிந்தவளே (செந்தாமரை)

சிந்தையில் நின்றாடும் நாரணன் நெஞ்சினில் நிறைந்தவளே
கருணையில் சிறந்தவளே (செந்தாமரை)

சுந்தரி பார்வதி பாமகளும் சொந்தமுடன் நினைக்கும் பூமகளே
உன் பதம் எந்நாளும் தஞ்சம் திருமகளே அன்பர்களைக்
காத்திடும் அலைமகளே (செந்தாமரை)

அலைகடலில் உதித்த ஆதிலக்ஷ்மி தாயே அமரர்கள் துதிபாடும்
அமுதமும் நீயே (2) செல்வங்கள் பெருகும் உந்தன் திருவருள்
துணையாலே (2) உலகமெல்லாம் உயரும் உன் அருள்
மணத்தாலே (செந்தாமரை)

## பாற்கடலில் வந்துதித்த

பாற்கடலில் வந்துதித்த பாக்ய லக்ஷ்மியே
பரந்தாமன் மார்பில் வாழும் மகாலக்ஷ்மியே
தாமரையில் வீற்றிருக்கும் தனலக்ஷ்மியே
தயவுடன் பசி தீர்த்தருளும் தான்யலக்ஷ்மியே
வேண்டும் மக்கள் செல்வம் தரும் சந்தானலக்ஷ்மியே

ஐஸ்வர்யம் எல்லாம் அளிக்கும் கஜலக்ஷ்மியே
அஷ்ட அரச போக வாழ்வளிக்கும் ராஜலக்ஷ்மியே
ஆதி லக்ஷ்மி, அனந்தலக்ஷ்மி, அன்னலக்ஷ்மியே
தீபஜோதி லக்ஷ்மி, சுவர்ணலக்ஷ்மியே, சுபலக்ஷ்மியே

கிரகலக்ஷ்மி, வரலக்ஷ்மி, சாந்தலக்ஷ்மியே
நாகலக்ஷ்மி, போகலக்ஷ்மி, யோகலக்ஷ்மியே
சித்தலக்ஷ்மி, கோலாகல ராதா லக்ஷ்மியே
சுவர்க்கலக்ஷ்மி, மோட்சசாம் ராஜ்யலக்ஷ்மியே
(பாற்கடலில்)

## ஸ்ரீ அஷ்டலக்ஷ்மி ஸ்தோத்ரம்

### ஆதிலக்ஷ்மி

ஸுமநஸ வந்தித ஸுந்தரி மாதவி சந்த்ர ஸஹோதரி ஹேமமயே
முநிகண மண்டித மோக்ஷ ப்ரதாயிநி மஞ்ஜுள பாஷிணி வேதநுதே
பங்கஜ வாஸிநி தேவஸு பூஜித ஸத்குண வர்ஷிணி சாந்தியுதே
ஜய ஜய ஹே மதுஸுதந காமிநி ஆதிலக்ஷ்மி ஸதாபாலயமாம்

### தான்ய லக்ஷ்மி

அயிகலி கல்மஷ நாசிநி காமினி வைதிக ரூபிணி வேதமயே
க்ஷீர ஸமுத்பவ மங்கள ரூபிணி மந்த்ர நிவாஸிநி மந்த்ரநுதே
மங்கள தாயிநி அம்புஜ வாஸிநி தேவ கணாச்ரித பாதயுதே
ஜய ஜய ஹே மதுஸூதந காமிநி தான்யலக்ஷ்மி ஸதாபாலயமாம்

### தைர்யலக்ஷ்மி

ஜயவர வர்ணிநி ! வைஷ்ணவி ! பார்கவி ! மந்த்ர ஸ்வரூபிணி மந்த் ரமயே
ஸுரகண பூஜித சீக்ரபலப்ரத ஜ்ஞான விகாஸிநி சாஸ்த்ரநுதே
பவபய ஹாரிணி பாபவிமோசநி ஸாது ஜநாச்ரித பாதயுதே
ஜய ஜய ஹே மதுஸுதந காமிநி தைர்யலக்ஷ்மி ஸதாபாலயமாம்

## கெஜலசஷ்மி

ஜய ஜய துர்கதிநாசினி காமிநி ஸர்வகல ப்ரத சாத்ஸ்ரமயே
ரதகஜ துரக பதாநி ஸமாவ்ருத பரிஜன மண்டித லோக நுதே
ஹரிஹர ப்ரம்மஸு பூஜித ஸேவித தாப நிவாரணி பாதயுதே
ஜய ஜய மதுஸுதந காமிநி கெஜலக்ஷ்மி ரூபணே பாலயமாம்

## ஸந்தான லசஷ்மி

அயிகஹ வாஹிநி மோஹிநி சக்ரிணி ராக விவர்த்திநி ஜ்ஞானமயே
குணகண வாரிதி லோக ஹிதைஷிணிஸ்வரஸப்த பூஷித கானநுதே
ஸகல ஸுராஸுர தேவ முநீச்வர மாதவ வந்தித பாதயுதே
ஜய ஜய மதுஸுதந காமி நி ஸந்தான லக்ஷ்மிஸதா பாலயமாம்

## விஜயலசஷ்மி

ஜய கமலாஸநிஸத்கதி தாயிநி ஜ்ஞான விகாஸிநி கான மயே
அனுதின மர்ச்சித குங்கும தூஸர பூக்ஷித வாஸித வாத்யனுதே
கனகதாரா ஸ்துரி வைபவ வந்தித சங்கர தேசிக மான்யபதே
ஜய ஜய மதுஸுதந காமிநி விஜய லக்ஷ்மி ஸதா பாலயமாம்

## வித்யாலசஷ்மி

ப்ரணத ஸுரேச்வரி! பாரதி ! சோக விநாசிநி ! ரத்னமயே
மணிமய பூக்ஷித கர்ண விபூஷண சாந்தி ஸமாவ்ருத ஹாஸ்யமுகே
நவநிதி தாயிநி கலிமல ஹாரணி காமித பலப்ரத ஹஸ்தயுதே
ஜய ஜயஹே மதுஸுதந காமிநி வித்யாலக்ஷ்மிஸதா பாலயமாம்

## தனலசஷ்மி

திமிதிமி திந்திமி திந்திமி துந்துபிநாத ஸுபூர்ணமயே
குங்கும குங்கும குங்கும குங்கும சங்க நிநாத ஸுவாத்யநுதே
வேத புராணே திஹாஸஸு பூஜித வைதிக மார்க்க ப்ரதர்சயுதே
ஜய ஜயஹே மதுஸுதந காமிநி தனலக்ஷ்மி ரூபணே பாலயமாம்

## ஸ்ரீ அபிராமி ஸ்துதி

அன்பே சிவமாய் அமர்ந்திருப்பாள் அன்னை அபிராமி
ஆறுதல் சொல்லி அமுதல் பொழிவாள் அன்னை அபிராமி
இப்புவி இன்பம் எல்லாம் தருவாள் அன்னை அபிராமி

ஈடில்லாத சாட்சியாய் இருப்பாள் அன்னை அபிராமி
உயர்வு தாழ்வு ஒன்றும் பாராள் அன்னை பராசக்தி
ஊக்கமிருந்தால் போதுமே என்பாள் அன்னை அபிராமி
எங்கும் நிறைந்த ஜோதியாய் இருப்பாள் அன்னை பராசக்தி
ஏகாக்ஷ ரமாய் எங்கும் இருப்பாள் அன்னை அபிராமி
ஐங்கரநாதனை ஆதியில் தந்தாள் அன்னை பராசக்தி
ஒட்டியாண பீடத்தில் அமர்வாள் அன்னை காமாக்ஷி
ஓம் ஓம் என்றால் ஓடியே வருவாள் அன்னை பராசக்தி
ஓம் ஓம் என்றால் ஆடியே வருவாள் அன்னை அபிராமி

## தேவி பாடம்

கொப்பியளோ பஞ்சநதீசா
கொப்பியளோ ப்ரணதார்த்தீசா
கொப்பியளோ ஜய தர்மஸம்வர்த்தினி
கொப்பிபாடுவோம் ஜய கொப்பியளோ

(என்ற பல்லவிக்கு சில பாகங்களை சந்தையாகப் பாடலாம்)

1. மிருகண்டுரிஷி பிள்ளை மார்க்கண்டே யமுனி
   யாகம் பண்ணுகின்ற காலத்தினில்
   மார்க்கண்டேயர் ஜய முனிவர்க்குச் சொன்ன
   மகாதேவியுடைய மகிமை எல்லாம்

2. வியாசமுனி பரீக்ஷித்துக்குச் சொன்ன
   விச்வேச்வரி மகிமை எல்லாம்
   ஸூதமுனி சவுனகாதி கட்குச் சொன்ன
   ஸ்ரீ தேவியின் மகிமை தன்னில்

3. அறிந்த மட்டுக்கும் நானுரைப்பேனிதில்
   அக்ஷரப் பிழைகள் வராமல்
   சேஷாத்திரி குருவை பணிந்தேமஹா
   தேவி மகிமை சொல்லத் துணிந்தேன்

4. சரஸ்வதியும் கணேசரும் எந்தனுக்கு
   தந்தேன் பாக்கியம் என்று சொல்ல
   சந்தோஷமான ஜயத்துடனே
   ஸர்வேச்வரி மகிமை யுரைப்பேன்.

## கதை வரலாறு

5. சுரதனென்ற ஓரரசன் தன்னுட
ஜகத்தை எல்லா மாண்டிருந்தான்
தர்மா தர்மத்தை ஆராய்ந்து நல்ல
சாஸ்திரப்படிக்கு ஆண்டிருந்தான்

6. அஸூயை யினாலொரு பகையரசன்
அவனை அடித்துத் துரத்தி விட்டான்
அதி சோகத்துடன் ராஜாவும் ஒரு
அடவிதனில் வந்து சஞ்சரித்தான்.

7. சாமதி என்கிற வைசிய னொருத்தன்
புத்திரருடன் விரோதப்பட்டு
பொருக்கமாட்டாது கோமுட்டியும்
புறப்பட்டு வந்தான் வனத்தை நோக்கி

8. கோமுட்டியைக் கண்டு ராஜனுமப்போ
குசலப்ரச்னம் கேட்டிடவே
அன்புடையாளுமென் புத்திராளும் மஹா
அவமானந்தனைப் பண்ணினார்கள்.

9. சகிக்கமாட்டாதே நானுமிப்போதிந்தத்
தவவனத்தினில் வந்தேனென்றான்
அவன் சொல்லிவந்த வார்த்தைகளைக் கேட்டு
ஆச்சரியப்பட்டு ராஜனப்போ

10. என்னுடைய வர்த்தமானந்தன்னை
எடுத்துரைப்பேன் நீர் கேளும்
சத்துருவால் ஒரு ராஜன் வந்து என்னை
சண்டைபண்ணி ஜயித்து விட்டான்

11. பாரியையுடனே புத்திராளையுமென்
பட்டணந் தன்னையும் நானிழந்தேன்
பந்து ஜனங்கள் தனையிழந்து இந்த
வேடர்வனத்தில் வந்தேனென்று

12. சொல்லிக் கொண்டு இருவருமாய்
சுமேதஸ் முனியைக் கண்டு பணிந்தான்
திடபுத்தியாய் இருக்கும்பொழுதிந்த
சோகம் வந்து மறைப்பானேன்.

13. ஞானஸ்வரூபியே சொல்லுமென்று கேட்க
ராஜாவைப் பார்த்து முனியுஞ் சொல்வர்
பள்ளுப்பறை பதினாலுசாதிகட்கும்
ஈ எறும்பு எண்பத்து நான்கினுக்கும்

14. எனது நானென்ற அபிமானம் ஜீவன்
எல்லாரிடமும் இருக்கின்றது
அகங்காரம் பூர்ணமாயிருக்கும்போது
அகம்பிருமம் நானென்கின்றீரே

15. அஞ்ஞானமாயா மயக்கம் விலக்கிட
ஹரி ப்ரம்மாவாலும் கூடாது
அண்டம்ப தினாலுலகம் முழுவதும்
அம்மன் மாய்கையினால் விளங்கும்

16. ஸ்ரீதேவி ஜகன் மாதாவினுடைய
திருஷ்டியினாலே விளங்கி நிற்கும்
ஸ்ரீதேவி மாயா வல்லபமென்றந்தச்
சுமேதஸ்முனியு முரைத்திடவே

17. தேவி யாரோ தெரியவில்லை என்று
திரும்பவும் ராஜன் கேட்கவுமே
ஸ்ரீதேவி மகிமை தன்னையப்போ
சுமேதஸ்முனியு முரைக்கலுற்றார்

## மதுகைடவர் விருத்தாந்தம்

18. திருப்பாற்கடல் தன்னில் ஸ்ரீ ஹரியும்
சேஷசயனத்தில் பள்ளிகொண்டார்
மகாவிஷ்ணுவின் கர்ணங்களிலிருந்து
மதுகைடவர் இருவர் உண்டானார்

19. விழித்துப் பார்த்தங்கே பிரம்மாவை அவர்கள்
முஷ்டியுத்தம் பண்ண வந்தெதிர்த்தார்
அயனுங்கண்டு பயந்து கொண்டு ஸ்ரீ
ஹரியை வந்து நமஸ்கரித்தார்.

20. நினைவு தெரியாது விஷ்ணுவுமப்போ
நித்திரையின் வசப்பட்டிருந்தார்
அம்மாதேவி நித்திராமோஹினியே பொல்லா
அஸுராள் பயத்தால் அயனிடம் வந்தேன்

21. மோகினியே ஜகன்மாதாவே மஹா
விஷ்ணுவைவிட்டு வெளியேரம்மா
(என்று) லோகமோஹினி மஹிமைதனைச் சொல்லி
நான்முகரும் ஸ்தோத்தரிக்க

22. பகவானுடைய சரீரந்தனை விட்டு (தேவி)
பிரத்தியக்ஷமாக எதிரில் வந்து
வேண்டும் வரத்தைக் கொடுத்து பிரம்மாவுக்கு
விச்வமோகினியும் மறைந்தாள்.

23. மஹாவிஷ்ணுவும் எதிர்நின்ற பிரம்மாவை
வந்தகாரியங் கேட்கலுற்றார்
(நீர்) யோக நித்திரை பண்ணுகின்றபோது
உம்முடைய கர்ணங்களிலிருந்து

24. மதுகைடவர் என்றிரண்டு பொல்லாத
மஹா அஸுரர்கள் உண்டானார்
அந்த அஸுரரைக் கொல்ல வேண்டுமென்று
ஹரியைப் பிரம்மன் நமஸ்கரித்தார்

25. ஆகட்டுமப்படியே சம்ஹரிப்போமென்று
அனுப்பி வைத்தார் பிரம்மாவை
மஹாவிஷ்ணுவுடன் யுத்தம் பண்ணப்பொல்லா
மதுகைடவர் வந்தெதிர்த்தார்

26. ஹரியுடனே அஸுரர்களிருவருக்கும்
அநேகங்காலம் யுத்தஞ்செய்தும்
ஹரியும் ஜயிக்க முடியாமல் அந்த
அஸுரர்களைப் பார்த்து சந்தோஷமாய்

27. அஸுரர்களே உங்களுக்கு எம்மால்
ஆனவரத்தைத் தருவோமென்றார்
ஆனவரத்தைத் தருவோமென்றவுடன்
அஸுராளும் அதிகோபத்துடன்

28. விஷ்ணுவைப் பார்த்தவர் கர்வத்துடன் உமக்கு
வேண்டும் வரத்தை நாம் தருவோமென்றார்
உங்களிருவைரையும் சம்ஹரித்திட
ஒருவரமெனக்கு வேண்டுமென்றார்

29. வஞ்சித்தார் நம்மை மஹாவிஷ்ணுவுமிப்போ
வார்த்தை இரண்டு சொல்லலாகாதென்று
சரிக்குச்சரி நாமும் ஆகவேணுமென்று
சக்கரத்தாருடன் ஏது சொல்வாள்

30. அப்பு இல்லாத ஸ்தலந்தினிலே எங்களை
பிருதிவியில் வைத்துக் கொல்லுமென்றார்
தன்னுடைய தொடைதனில் வைத்துமே
சம்ஹரித்தாரப்போ அஸுரர்களை

31. அஸுரர்களுடைய தேகங்கள் தானிப்போ
அவனியாக இதோ விளங்குவது
ராஜேஸ்வரி மகிமைகள் தான் சொல்ல
நான்முகராலும் முடியாது.

## மகிஷாஸுரன் விருத்தாந்தம்

32. மகிஷ அஸுரன் என்னும் ஒருத்தன்
தபஸுமிகப்பண்ணி வரமடைந்தான்
ஜகத்திலுள்ளோரை உபத்திரவிக்க அஸுரன்
தேவர்கள் ரிஷிகளெல்லாருங்கூடி

33. கைலாசத்திற்கு ஓடிவந்தெல்லோரும்
அறிவித்தாள் மஹாதேவருக்கும்
சிவனுடைய சன்னதியில் நின்று
தேவிமகிமைசொல்லி ஸ்துதித்தாள்

34. தேவாளுடைய முகத்திலிருந்தம்மன்
தேஜோரூபமாய் ஒன்ற சேர்ந்து
அத்தனை பேர்களின் தேஜஸைக் கிரகித்து
அம்மன் பிரத்தியக்ஷமாக வந்தாள்

35. அத்தனை தேவர்களும் பணிந்து தங்கள்
ஆயுதமும் தேவி கைக்கொடுத்தாள்
பக்தியாய் ஆயுதமுங்கொடுக்க அம்மன்
பதினெட்டுக்கையிலுந் தரித்துக் கொண்டு

36. சிம்ஹவாகனத்தில் ஏறிக்கொண்டாள் மஹா
தேவியும் யுத்தம் பண்ணவந்தாள்
மஹிஷாஸுரனும் தேவியுமாய் மஹா
ஆங்காரமாய் யுத்தம் பண்ணலுற்றார்

37. அநேக காலம் மகிஷன் தேவியுடன்
அஞ்சாமலே யுத்தம் செய்து நின்றான்
மாய்கையினால் பல ரூபமெடுத்தவன்
மகாதேவியுடன் யுத்தம் செய்தான்

38. காளிரூபமெடுத்துக் கொண்டு தேவி
கைதனில் சக்கராயுதமுங்கொண்டு
மஹிஷரூபமெடுக்கும் போதவனை
மடியவெட்டினாள் மாதேவியும்

39. காமாக்ஷிதேவியும் சந்தோஷமாயந்தக்
காளிதேவியைக் கண்டுகந்து
மஹிஷாஸுரவர்த்தினி என்றப்போ
மஹாதேவியும் தானழைத்தாள்

40. மஹிஷாஸுரனை ஸம்ஹரித்த எங்கள்
மஹாதேவியே நமஸ்காரம்
மனஸ்தாபம் போக்கி நாடுகள் தந்த
மஹேஸ்வரியே நமஸ்காரம்

41. அண்டத்திற்கெல்லாம் அதிபதியே
ஜகதாம்பிகையே நமஸ்காரம்
அபயமென்றோரை ரக்ஷித்திடும்
அம்மா உனக்கு நமஸ்காரம்

42. பிரணவமயமான பார்வதியே
பரதேவதையே நமஸ்காரம்
சுத்தஸ்வரூப சுந்தரியே சிவ
காமவல்லியே நமஸ்காரம்

43. ஞானஸ்வரூபியே கல்யாணியே
ஸ்ரீமந்நாராயணியே நமஸ்காரம்
சாந்தரூபசரீரிணியே சிவ
சங்கரியே நமஸ்காரம் (என்று)

44. தேவரெல்லோரும் ஸ்துதிக்கவுமே
(மஹா) தேவியுங்கேட்டதில் சந்தோஷமாய்
வேணுவரங்களைக் கேளுந்தரோமென்று
தேவநாயகி சொல்லுமே

45. ஆபத்துக்களொன்றும் வாராமலே எங்கள்
அம்மா வந்து நீ ரக்ஷிக்க வேணும்
ஆகட்டுமென்று விடையளித்து ஜக
தம்மனும் அந்தர்த்தான மடைந்தாள்.

## சும்பன் நிசும்பன் விருத்தாந்தம்

46. அதற்குப்பின் சிலகாலத்தினில் பொல்லா
அஸுரர் இரண்டுபேர் உண்டானார்
அந்த அஸுரரானை சம்ஹரித்த ஜக
தம்பிகையின் மகிமை சொல்லுவேன்

47. சும்பன் நிஸும்பன் என்றிரண்டு பொல்லா
சூரர்களப்போ உண்டானார்கள்
பால்யவயதில் தபஸுபண்ணி அவர்
வரங்கள் வேணதெல்லா மடைந்தார்

48. இந்திரனுடனே தேவர்கள் பிரம்மனை
எல்லாரையுமடித்துத் துரத்தி
சமஸ்தலோகம் நடுங்கிடச் செய்து
சங்கையில்லாமலே ஆண்டிருந்தார்.

49. நடுங்கிப் போயந்தத் தேவர்களெல்லாம்
நமக்குப் பொல்லாத காலமென்று
வெவ்வேறு ரூபமெடுத்துக் கொண்டு தேவாள்
பூலோகத்தில் வந்து சஞ்சரித்தார்.

50. நாற்பத்தோரு சதுர்யுகமாய்த் தேவர்
ராஜ்ஜியந்தன்னை யிழந்திருந்தார்
விமோசன மொன்றையும் காணோமே என்று
விஷ்ணு உலகத்திற் கோடிவந்தாள்.

51. நடுங்கி வந்தீர்கள் தேவர்களே இப்போ
நம்மாலிதற்கொன்று மாகாது
விஷ்ணுமூர்த்தியும் தேவரும் இந்திரனும்
விரிஞ்சமூர்த்தியுங் கூடிக்கொண்டு

52. மஹாமேரு பர்வதச் சாரலிலே
வந்து பிரம்மாதி தேவரெல்லாம்
இதற்கு நாமென்ன செய்யப் போறோமென்று
ஏக்கமடைந்தார் அமரரளெல்லாம்

53. புத்தியுள்ள ஒருதேவனப்போ எண்ணி
பூர்வத்தில் தேவியும் சொன்னாரே
இடுக்கண் வந்திட்ட வேளையினிலே
என்னை ஸ்துதியுங்கள் என்றாரே

54. ஆமாம் அதுவும் உள்ளதென் றெண்ணியே
அமரா ளெல்லாருங் கூடிக் கொண்டு
நமஸ்தே நமஸ்தே என்ற சொல்லியப்போ
ராஜேஸ்வரியை ஸ்தோத்தரித்தார்.

55. மூலாதாரி சரஸ்வதியே ஜகந்
மோஹினியே நமஸ்காரம்
மாயாதாரியே லக்ஷ்மியே
மாஹேஸ்வரியே நமஸ்காரம் என்று

56. பகவான் தேகத்தில் பாதியன்றோ எங்கள்
பார்வதியே நமஸ்காரம்
எங்களை ரக்ஷிக்க வேண்டுமிப்போ ஜக
தீஸ்வரியே நமஸ்காரம் என்று

57. தேவரெல்லாருமாய் ஸ்தோத்தரிக்க
தேவியும் பிரத்யக்ஷமாக வந்து
அஞ்சாதேயுங்கள் நீங்களென்று
(அப) யஸ்தங்கொடுத்தாள் தேவருக்கு

58. ஹிமயபர்வதந் தன்னில்வந்து தேவி
கன்னிகாரூப மெடுத்துக் கொண்டு
கோகிலம் போலும் குரலுடையாள்
கொம்புத்தேன் போலும் மொழியுடையாள்

59. ஹம்ஸம்போலும் நடையுடையாள்
அபயங்கொடுக்கும் கரமுடையாள்
மன்மதன் கைக்கொண்ட விற்போலுமுள்ள
வளைந்த புருவச் சிலையழகும்

60. முத்துக்கோத்தாற்போல் பல்லொளியும்
பவழம் போன்ற அதரங்களும்
பட்டமுஞ்சுட்டியும் நெற்றிதன்னில் மின்ன
பதக்கம் சரப்பளி மார்பிலசைய

61. தண்டைசிலம்பு கல கலலென்னக்காலில்
சிலம்பு கொஞ்சிச் சலுஞ்சலென்க
சொர்ணமயமான ஊஞ்சலில் இருந்து
கோடிசூரியர் உதித்ததுபோல்

62. தங்கத்தினாலான சங்கிலியைத் தொட்டு
தானேபாடிக் கொண்டு ஆடலுற்றாள்
சண்டமுண்டரென்ற இரண்டஸுரர்களும்
(தேவி) கானந்தன்னைக் கேட்டு ஓடிவந்து

63. தேவியுடைய அருகினில் வந்தாள்
சேதியொன்று எடுத்துரைப்பாள்
எங்கள் ராஜாவின் ப்ரதாபங்கள் தன்னை
இத்தனை நாளிலுங் கேட்டில்லையோ

64. சும்பன் நிசும்பன் என்றிரண்டு பேர்கள்
மூன்று உலகமும் ஆண்டிருக்காள்
உமக்குமெத்த அழகிருந்து மிப்போ
போக பாக்கியம் புஜியாமல்

65. அதிசயமான ரூபத்துடன் நீரும்
தனித்ததிருக்கின்ற காரியமேன்
எங்கள் ராஜனுக்கே ஏர்வையம்மா நீர்
இந்தக்ஷணத்தில் வாருமம்மா

66. வாருமென்றஸுரன் சொல்லவுமே
மஹேஸ்வரியும் எடுத்துரைப்பாள்
ஸ்திரீ புத்திக்கு ஸ்திரமில்லையே நான்
தெரியாமலே ஒன்று செய்து விட்டேன்

67. பிரதிக்ஞை ஒன்று செய்து கொண்டேன்
என் பர்த்தாவாய் வரவேணுமென்றால்
யுத்தம் பண்ணியே என்னை ஜயித்தவர்
எனக்கிஷ்டமாகிய பர்த்தாவென்று

68. உங்கள் ராஜவுக்குச் சொல்லுங்களென்றம்மன்
உத்தரஞ்சொல்லி அனுப்பி வைத்தாள்
சண்டமுண்டரும் ஓடிவந்தாரந்தச்
சும்ப நிசும்பர் அண்டையினில்

69. உச்சிதமாகின்ற ரத்தினங்கள்
உங்களிடத்தில் இருந்தாலும்
சேர்க்க வேண்டிய இரத்தினங்களில்
ஸ்திரீ ரத்தினம் உங்களுக்கில்லையே

70. ஏற்றமானதோர் கன்னிகாரத்தினம்
ஹிமய பருவதத்திலிருக்காள்
சகாயமாகப் புருஷர்களுமில்லை
தனித்திருக்காள் சகியுடனே

71. சண்டமுண்டரும் சொல்லவுமே
சும்பாஸுரன் கேட்டுச் சந்தோஷமாய்
சும்பன் மகிழ்ந்து தன் மந்திரியான
சுக்ரீவன் தன்னைக் கிட்டழைத்து

72. என்மகிமைகளை அவளுக்குரைத்து (நல்ல)
இஷ்டமாகிய வார்த்தை சொல்லி
வார்த்தை சொல்லி வசமாக்கிக் கொண்டு
வாருமென்று அனுப்பி வைத்தான்

73. சுக்ரீவன் கேட்டு சந்தோஷமாய் வெகு
சீக்கிரமாகவே ஓடி வந்தான்
தேவியருகினில் கிட்டவந்து மெள்ளச்
சேதியை நன்றாய் எடுத்துரைப்பான்

74. எங்கள் ராஜாவின் சேதிப்பரதாபங்கள்
வந்தவர்களிங்கே சொல்லலையோ
சும்பநிசும்பனென்று இரண்டுபேர்
மூன்றுலகுங்கட்டி யாண்டிருக்கார்

75. உமக்கு மெத்த அழகிருந்தும் நல்ல
போகபாக்கியம் புஜியாமல்
(இந்த) அதிரூப சவுந்திரியத்துடன்
தனித்திருக்கின்ற காரியமேன்

76. எங்கள் ராஜாவிற்கு ஏர்வையம்மா நீர்
இந்த க்ஷணத்தினில் வாருமென்றான்
வாருமென்று அழைக்கவுமேயவன்
மாஹேச்வரியுமேது சொல்வாள்

77. சபதமொன்றல்லவோ செய்திருக்கேன்
சத்தியமாகவே சொல்லுகிறேன்
சண்டையிட்டு என்னை ஜயித்தவர்கள்
கொண்டு போகலாமென்று சொல்லி

78. உங்கள் ராஜாவிற்குச் சொல்லுங்களென்று
உத்தரஞ்சொல்லி யனுப்பிவைத்தாள்
சுக்ரீவன் கேட்டுக் கோபத்துடன்
சும்பாஸுரன் கிட்டவந்து சொன்னான்

79. சும்பாஸுரன் கேட்டுக் கோபத்துடன்
தூம்ப்ரலோசனைக் கிட்டழைத்து
நயபயமாய் அவளுக்குச் சொல்லி
நம் மகிமை எடுத்துரைத்து

80. (இந்தச்) சேதியொன்றையுங் கேட்காவிட்டால்
சிட்சை பண்ணிக் கொண்டு வாருமென்றான்
தூம்பரலோசனன் கேட்டுச் சந்தோஷமாய்
துரிதமுடன் தேவிகிட்ட வந்து

81. ஏனம்மா இந்த அக்ரமம் உனக்கு
எங்கள் இராஜரிடத்தினிலே
சேராதே போனால் உம்மையிப்போ நான்
சிட்சைபண்ணுவே னென்று சொல்லி

82. அதட்டியே சிலவார்த்தை சொல்லியவன்
இழுக்க வந்திட்டான் அம்மனையும்
பார்த்து அம்மனும் ஹுங்காரம் பண்ணவே
பஸ்பமாக எரிந்து போனான்.

83. தூம்ப்ரலோசனன் பட்டுப்போனானென்று
தூதர்கள் ஓடிச் சொன்னாருடனே
மந்திரியும் பட்டுப்போனான் என்றவுடன்
மண்டியெரிந்து கண்கள் சிவந்து

84. சண்டமுண்டரைக் கிட்டழைத்து நீங்கள்
சம்ஹரித்திங்கே வாருமென்றான்
சண்டமுண்டரும் ஓடிவந்து அந்தச்
சங்கரி தேவியை வந்தெதிர்த்தார்

85. கண்டு தேவிதன் கோபத்தீயாலே
காளிதேவியை உண்டாக்கினாள் (அவள்)
சண்டமுண்டர் தலையை வெட்டிச்சிவ
சங்கரி தேவிமுன் வைத்து நின்றாள்

86. சங்கரி யம்மனும் சந்தோஷமா யப்போ
சாமுண்டி என்றபேர் தான் கொடுத்தாள்
தேவர்கள் எல்லாருங் கூடிக் கொண்டு மஹா
தேவிக்குப் புஷ்பமலர் சொரிந்தார்.

87. சண்டமுண்டரும் பட்டாரென்று கேட்டு
சர்ப்பம் போலே யவன் சீறிக்கொண்டு
தனக்குண்டானதோர் சேனைக்கெல்லாமப்போ
அரை க்ஷணத்தில் ஆணையிட்டான்

88. எண்பத்து நாலாயிரம் சேனைகளும்
இமைப்பொழுதினிற் கூட்டி வைத்தான்
அதிபலவானான இரத்த பீஜன் தன்னை
அம்பிகைமுன்னால் அனுப்பி வைத்தான்

89. சகலதேவர்கள் அம்சங்களுஞ் சேர்ந்து
ஸப்தமாதர்கள் உண்டானாள்
நாராயணி நரசிம்ஹி என்றும்
வைஷ்ணவி மஹாதேவி என்றும்

90. பிரஹ்மாணி கௌமாரி என்றும்
காளி சாமுண்டிதேவி என்றும்
ஈச்வரியுடைய தோழிகளாகவே
ஏழுபெண்டுகள் கூடிக் கொண்டு

91. ரத்தபீஜனுடன் யுத்தம் பண்ணும்போது
ரத்தங்கீழே விழுந்ததப்போ
பிந்துவுக்குப்பிந்து இரத்தபீஜனாக
பூமியெங்கிலும் முளைக்கலானான்

92. அம்பிகையினுடைய ஆக்ஞையினால் மஹா
அட்டகாஸத்துடன் காளிதேவி
இரத்தபீஜனை சம்ஹரித்து அவன்
இரத்தமெல்லாம் உறிஞ்சிவிட்டாள்

93. காளிதேவியும் இரத்தபீஜர்களை
வாரிவாரி விழுங்கி விட்டாள்
இரத்தபீஜனும் பட்டவுடன் பொல்லா
நிசும்பனும் பார்த்துக் கோபத்துடன்

94. ஸம்ஹரிப்பேன் இவளையென்று சொல்லி
சப்தம்செய்து தமயன்முன்னே
தேவியுடனே எதிர்த்து நிசும்பனும்
தோற்காமலே யுத்தம் செய்து நின்றான்.

95. ஆயிரமாயிரம் அம்பு தொடுத்தவன்
அஞ்சாமலே யுத்தம் பண்ணலுற்றான்
நேரேயுத்தம் பண்ணி லீலாவினோதமாய்
நிசும்பனைக் கொன்றாள் ஸ்ரீதேவியும்

96. தம்பியும் பட்டதைக்கேட்டுக் சும்பாஸுரன்
சங்கையில்லாத கோபத்துடன்
அம்பிகை யெதிரில் வந்து சும்பாஸுரன்
ஆங்காரத்துடன் ஏது சொல்வான்

97. யுத்தம்பண்ணத் தெரிந்தவளோ எங்கள்
இத்தனை பேரையும் ஏய்த்தாயேடி நீயும்
யாருமில்லாதே யிருந்தாயேடி நீயும்
ஏழுபேருடனிப்போ நின்றாயடி

98. (என்) அளவில்லா சேனைகளுக்கெல்லாம்
அனலாக வந்து நின்றாயடி
(என்) சங்கையில்லாத சேனைகளுக்கெல்லாம்
சதிகாரியாக நீ வந்தாயடி

99. சதிகாரியடி நீயுமிப்போ என்னை
கற்பனை செய்யவே வந்தாயடி
வஞ்சித்தாயடி நீயுமென்னை யிப்போ
வார்த்தைகள் இரண்டு சொன்னாயடி

100. ஒருத்தியாக இருந்து கொண்டன்றோ நீ
உத்தரஞ்சொல்லி யனுப்பி வைத்தாய்
அத்தனைபோர்களைச் சேர்த்துக் கொண்டு இப்போ
அதட்டுகிறாயடி நீயுமென்னை

101. (உன்) அழகான உருவத்தை கண்டபின்
அமர்புரியவென் கையெழுமோ
துரத்தி எல்லோரையும் காளியை என்னுடன்
தொந்தயுத்தம் பண்ணச் சொல்வாயென்றான்.

102. சும்பன் வார்த்தையைக் கேட்டு சகிகளே
இங்கே வாருங்கள் என்றழைத்து
வாரியணைத்தாள் சகிகள் எல்லோரையும்
மாரோடு மறைந்து ஐக்கியமானாள்

103. இரண்டாம்பேரிங்கில்லை காளியுடன் நீ
எதிர்த்து யுத்தமும் பண்ணுயென்றாள்
அம்மன் செயலையும் வார்த்தையும் கேட்டு
அம்புபட்டாப் போலுந்தானுருகி

104. சும்பாசுரனும் காளிகாதேவியும்
தோற்காமலே யுத்தம் பண்ணலுற்றார்
அடித்தபந்து கிளம்பினார் போலவன்
ஆகாயத்தினிலே கிளம்பி

105. ஒருவர்க்கொருவர் சளையாமல் அங்கு
ஓட்டோடி யுத்தமும் பண்ணினார்கள்
சும்பாஸுரனும் காளிகாதேவியும்
தொந்தயுத்தமும் பண்ணினார்கள்

106. தேவர்களெல்லாம் பயத்துடனே மஹா
தேவியை ஸ்துதித்துக் கொண்டிருந்தார்கள்
எத்தனை பொழுதாக யுத்தம் பண்ணுவோம்
என்று காளியும் கோபத்துடன்

107. சும்பாஸுரனை வதைத்தாள் காளியும்
துர்க்காதேவி யென்றம்மனை அழைத்தாள்
துர்க்காதேவியம்மன் அஸுரனை வதைக்க
தேவர்கள் புஷ்பமழை சொரிந்தாள்

108. அத்தனை தேவர்களும் கூடி ஜக
தம்பிகை தன்னை ஸ்துதிக்கலானார்
சும்பநிசும்பரை ஸம்ஹரித்த எங்கள்
துர்க்கா தேவிக்கு நமஸ்காரம்

109. துக்கம் போக்கியே நாடுதந்த எங்கள்
தேவியே உமக்கு நமஸ்காரம்
சண்டமுண்டனை ஸம்ஹரித்த எங்கள்
துர்க்காதேவிக்கு நமஸ்காரம்

110. ரத்தபீஜனை ஸம்ஹரித்த எங்கள்
பத்திரகாளியே நமஸ்காரம் (என்று)
பக்தியாய்த் தேவர் பணிந்து ஸ்துதித்திடப்
(பர) தேவியும் பார்த்துச் சந்தோஷமானாள்

**தேவியைப் பூஜித்து ஸ்துதித்தவர்கள் அடையும் பலனை விவரித்தல்**

111. ஆபத்துக்கள் ஒன்றும் வராது
அன்புடனிதைப் படித்தவர்க்கு
பேய்பிசாசுகள் அண்டாதவர்களுக்கு
புத்திரசோகம் அனுபவியார்

112. தரித்திரங்கள் அனுபவியார்
தீர்க்காயுசையும் நான் கொடுப்பேன்
புத்திரசம்பத்தும் நான் கொடுப்பேன்
பரதேவதை பக்தியைச் செய்த போக்கு

113. விப்ராகளிதைக் கேட்டு விட்டால்
வேதசாஸ்திரம் விருத்தியாகும்
க்ஷத்திரியர்கள் இதைக்கேட்டு விட்டால்
ஜயத்துடனே அரசாள்வார்

114. வைசியர்களிதைக்கேட்டு விட்டால்
வியாபாரத்தில் வெகுலாபமுண்டாம்
சூத்திரர்களிதைக் கேட்டு விட்டால் நல்ல
ஜயமுடைவான் கிருஷித் தொழிலில்

115. ஸ்திரீகள் பக்தியுடனே படித்தாலிதை
தீர்க்க சுமங்கலியா யிருப்பாள்
கன்னியாப் பெண்களிதைப் படித்தால் நல்ல
கணவர் தன்னை யடைந்திடுவாள்

116. நவராத்திரியில் தவறாமல் பூஜித்தால்
ராஜேஸ்வரியின் கிருபை யடைவார்
பஞ்சபாதங்களில் பக்தியாய் பூஜித்தால்
பரதேவியின் பதமடைவார்

117. நித்தியமாக ஸ்துதித்தவர்களுக்கு
நினைத்தவரமும் நான் கொடுப்பேன்
வெள்ளி செவ்வாயில் ஸ்துதித்தவர்களுக்கு
வேண்டும் வரங்கள் கொடுத்திடுவேன்

118. மனதிலுள்ள அபீஷ்டங்களெல்லாம்
வருந்தும் உங்கட்கு தருவோமென்றாள்
தருவேனென்றம்மன் சொல்லவுமே அந்த
தேவர்களெல்லாம் மனமகிழ்ந்து

119. ஒருக்காலும் ஆபத்து வந்திடாமல்
உகந்து ரக்ஷிக்க வேணுமம்மா
உகந்து ரக்ஷிக்க வேணுமென்றவுடன்
உலகநாயகி ஏது சொல்வாள்

120. அநேககாலங் கழிந்தவுடன் பொல்லா
அஸுரர் மிகவும் உபத்திரவிப்பாள்
நந்தகோபர் அரண்மனை தன்னில்
கண்ணனாய் பிறந்து ரக்ஷிக்கிறேன்

121. பாரத மாதாவாய் ராஜ்யங்களெல்லாம்
பரிபாலித்து நான் ரக்ஷிக்கிறேன்
ஆறுதல் சொல்லியே தேவர் எல்லோருக்கும்
அம்பிகை அந்தர்த்தான மடைந்தாள்

**சுரதனென்ற ராஜனும் சரமதி என்ற கோமுட்டியும் தேவியைப் பூஜித்துப் பலனடைதல்**

122. வைசியனும் மகாராஜாவும் தேவியின்
மகிமை கேட்டு மனமகிழ்ந்து
தவமுனிவர் ஆக்ஞையினால் கத்
தம்மனை நோக்கித் தபசு செய்ய

123. சையபருவதம் சாரலிலே வந்தார்
சாமதியுடனே இராஜனப்போ
இந்திரியங்களுடன் வாயுவையும்
எல்லாவற்றையும் உள்ளடக்கி

124. அம்மனை நோக்கி இருவருமாய்
அநேகங்காலம் தவமிருந்தாள்
தபஸைக்கண்டதில் சந்தோஷமாய்
சங்கரியுமவாள் முன்னே.வந்தாள்

125. என்ன வரம்வேணுமென்று அரசனை
ஈச்வரி தேவியுங் கேட்கவுமே
எந்தனுவையதோர் நாடுராஜ்ஜியங்களும்
எப்போதும் போலவே வேண்டுமென்றார்

126. ராஜ்ஜியத்தை யடைவாயென்றம்மன்
ராஜாவைப் பார்த்து எடுத்துரைப்பாள்
அறுபதினாயிரம் ராஜ்ஜியத்தை யாண்டு
அவதரிப்பாய் மநுவாக

127. ராஜாவைப் பார்த்து வரங்கொடுத்து அம்மன்
சாமதியைப் பார்த்துகேளு மென்றாள்
(உங்கள்) ஐக்கியம் ஒன்றுமே போதுமம்மா
உம்முடைய கிருபை வேணுமம்மா

128. அப்படியே உந்தன் சித்தம் துலங்கியே
ஆத்மக்கியானம் அடைந்திடுவாய்
ஜீவன் முக்தியடைந்திடுவாயென்று
தேவியும் அந்தர்த்தான மடைந்தாள்

129. ராஜனும் தேவிகிருபையடைந்து தன்
ராஜ்ஜியமடைந்து ஆண்டிருந்தான்
சுமேதஸ் முனியின் ஆசிரமத்தில்
சாமதியும் ஞான வானாயிருந்தான்

130. தேவி பாகவ்த புராணத்திலுள்ள
சிறந்த ஐந்தாம் ஸ்கந்தமிதை
துஷ்ட அஸுரரை சம்ஹரித்த இந்த
தேவி மகிமை படித்தவர்கள்

131. அன்புடன் தேவி மகிமை தன்னைச் சொல்லி
அநுதினமும் ஸ்துதித்தவர்கள்
அம்பிகை பாதாரவிந்தத்திலேயவர்
ஐக்கியப் பதமடைந்திடுவாள்.

## ஸ்ரீ தேவியை அழைத்தல்

1. தேவி பராசக்தி வா வா வா
தீனதயாபரியே "
தேடிவந்தோம் இங்கு "
தினமும் அருள் செய்ய "

2. குஞ்சரமுகன் தாயே "
குணக்குமரன் அன்னையே "
ஹரிஹரனை ஈன்றவளே "
ஸ்ரீ ஹரியின் சோதரியே "

3. பக்தியை தந்தருள்வாய் "
சித்த சுத்தியை தந்தருள்வாய் "
பாபமெல்லாம் தீர்ப்பாய் "
பாபவினாசினியே "

4. கலியுக தெய்வமே "
கற்பக வடிவே "
சங்கரி சாம்பவீ "
சாவித்திரி மாதாவே "

5. கஷ்டங்கள் தீர்த்தருள் "
காயத்திரி தெய்வமே "
குரு ஸ்வரூபிணியே "
குறி சொல்லும் தெய்வமே "

6. நமசிவாய ஸ்வரூபமே "
நவாபரண ஸ்வரூபி "
ஹ்ரீம்கார ரூபிணி "
ஸ்ரீவித்யா ரூபிணி "

7. வேதபுரீச்வரீ "
நாதலப்ரியே "
ஸ்ரீக்ருஷ்ண மாரியே "
காளி கருமாரியே "

8. மூப்பை அறுப்பவளே "
முப்பாத்தம்ம தேவியே "
நாகஸ்வரூபிணியே! "
நாகாபரண பூஷிதையே (தேவீ)

ஸ்ரீ தேவி பராசக்தி

## ஸ்ரீ பராசக்தி பிரார்த்தனைகளும் நமஸ்காரமும்

(நாத பிந்து கலாதி என்ற மெட்டு)

1. ஆதி சக்திஸ்வரூபி நமோ நமோ
ஆனந்தி ரூபிணி தேவி "
இன்பமளிக்கும் ஜகஜ் ஜோதி அருள்தாராய்

2. ஈச்வரி வடிவே சக்தி நமோ நமோ
எங்கும் நிறைந்த மஹாமாயே "
உலகெல்லாம் காக்கும் உமையே ஸ்ரீ பராசக்தி

3. ஐங்கரன் தன்னை ஈன்ற தாயே நமோ நமோ
ஒளியாய் வெளியாய் நின்றாய் "
ஓம்காரரூபிணி மாதா ஸ்ரீ வைஷ்ணவீ

4. காஞ்சி மாநகர் வாழும் தேவீ நமோ நமோ
சங்கரன் மோஹினி சக்தி "
கவலைகள் தீர்த்திடும் காளீ ஸ்ரீ காமாக்ஷி

5. பாண்டிய ராஜகுமாரீ நமோ நமோ
பர்வதவர்த்தினியாய் வந்தாய் "
மதுரை மாநகர் வாழும் ராணி ஸ்ரீ மீனாக்ஷி

6. விச்வநாதர் மகிழ் தேவி நமோ நமோ
ஸ்ரீ காசி புராதீசர் ராணி "
கருணா சாகரி கௌமாரி ஸ்ரீ விசாலாக்ஷி

7. ஓம்கார மந்த்ர வடிவே நமோ நமோ
துங்கா நதிக்கரை அமைத்தாய் "
சிருங்ககிரி வாழும் தேவி ஸ்ரீ சாரதாம்பா

8. ஹ்ரீம் கார மந்த்ர வடிவே நமோ நமோ
சௌபாக்ய தாயினி துர்க்கே "
சஞ்சலம் தீர்க்கும் ஜகன்மாதா ஸ்ரீ புவனேச்வரியே

9. அகிலமெங்கும் காணும் ஜோதி நமோ நமோ
ஆனந்த ஒளியே திருவிளக்கே "
அன்புவழி காட்டும் தேவி ஸ்ரீ மஹாலக்ஷ்மி

10. கமலாலயம் வாழும் தேவி நமோ நமோ
தியாகராஜன் மகிழ் மாதா "
கருணைவெள்ளமே கல்யாணி ஸ்ரீ கமலாம்பிகே

11. ஸ்ரீநிவாஸர் மஹாதேவி நமோ நமோ
ஸ்ரீ தேவி பூதேவி ரூபி "
பதுமராக ஜகஜ்ஜோதி ஸ்ரீபத்மாஸனியே

12. துக்க நிவாரணி துர்க்கே நமோ நமோ
மங்களவார தேவி காளீ "
சிந்தையில் உள்ள துன்பம் தீர்ப்பாய் ஸ்ரீ சாமுண்டி

13. புற்றுருவாய் வந்த பரமேசீ நமோ நமோ
பூர்ணகும்பவாஸீ பாலா "
பக்தி என்னும் பால்தரும் கோமாதா ஸ்ரீ கோமதீ

14. வைராக்ய ரூபிணி வாராஹி நமோ நமோ
பக்திஸ்வரூபிணி ப்ராஹ்மீ "
மன்மதன் தாயே மஹேசீ ஸ்ரீ மாதங்கி

15. வித்யா சாகரி வைஷ்ணவி நமோ நமோ
இகபர சுகம் தரும் இந்த்ராணி "
துரிதநிவாரணி ஸ்ரீ துர்க்கே ஸ்ரீ கன்யாகுமரி

16. கருணாசாகரி கருமாரீ நமோ நமோ
கண்கண்ட தெய்வமே காளீ "
முன்னின்று காக்கும் மும்பாத்தா ஸ்ரீ மஹாசக்தி

17. ஸர்வமங்கள ராஜேஸ்வரி நமோ நமோ
ஸௌபாக்யம் தரும் ஜகன்மாதா "
ஸத்குரு ரூபிணி சக்தி ஸ்ரீ ராஜேஸ்வரி

18. மாதவன் சோதரீ மாயே நமோ நமோ
ஐங்கரன் அன்னையே சிவகாமி "
கலியுக தெய்வமே கற்பகமே ஸ்ரீ காந்திமதியே

19. மல்லிகேசர் மனம் மகிழ் ராணி நமோ நமோ
மரகதவல்லி ஜகஜ் ஜனனீ "
மாயை வடிவான மஹேச்வரியே ஸ்ரீ சாந்தி துர்கையே

## அலங்காரம்

சின்னஞ்சிறு பெண்போலே சிற்றாடை இடையுடுத்தி
சிவகங்கைக் குளத்தருகே ஸ்ரீ துர்க்கை சிரித்திருப்பாள்
(சின்னஞ்சிறு)

பெண்ணவளின் கண்ணழகை பேசி முடியாது
பேரழகிற்கீடாக வேறொன்றும் கிடையாது
(சின்னஞ்சிறு)

மின்னலைப் போல் மேனி அன்னை சிவகாமி
இன்பமெல்லாந் தருவாள் எண்ணமெல்லாம் நிறைவாள்

பின்னல் ஜடைபோட்டு பிச்சிப்பூ சூடிடுவாள்
பித்தனுக்கு இணையாக நர்த்தனம் ஆடிடுவாள் (சின்னஞ்சிறு)

## ஸ்ரீ மகிஷாஸுர மர்த்தினி ஸ்தோத்திரம்

அயிகிரி நந்தினி நந்தித மேதினிவிச்வ விணோதினி நந்தனுதே
கிரிவர விந்த்ய ஸிரோதி நிவாஸினி விஷ்ணு விலாஸினி ஜிஷ்ணுநுதே

பகவதி ஹேஸிதி கண்ட குடும்பினி பூரி குடும்பினி பூரிக்ருதே
ஜய ஜய ஹே மஹிஷாஸுர மர்தினி ரம்ய கபர்தினி சைல ஸுதே

ஸுரவர வர்ஷிணி துர்தர தர்ஷிணி துர்முக மர்ஷிணி ஹர்ஷரதே
த்ரிபுவன போஷிணி சங்கர தோஷிணி கில்பிஷ மோஷிணி கோஷரதே
தநுஜ நிரோஷிணி திதிஸுத ரோஷிணி துர்மத ஸோஷிணி ஸிந்துஸுதே
(ஜய ஜய)

அயிஜ கதம்ப மதம்ப கதம்பவந ப்ரியவாஸினி ஹாஸரதே
ஸிகரி ஸிரோமணி துங்க ஹிமாலய ச்ருங்க நிஜாலய மத்யகதே
மதுமதுரேமது கைடப கஞ்ஜினி கைடப பஞ்ஜினி ராஜரதே

அயிசத கண்ட விகண்டி த்ருண்ட விதுண்டித சுண்ட கஜாதிபதே
ரிபுகஜ கண்ட விதாரண சண்ட பராக்ரம ஸுண்ட ம்ருகாதிபதே
நிஜபுஜ தண்ட நிபாதித கண்ட விபாதித முண்ட படாதிபதே (ஜயஜய)

அயிரண துர்மத சத்ருவ தோதித துர்தர நிர்ஜர சக்திப்ருதே
சதுர விசார துரீண மஹாசிவ தூதக்ருத ப்ரம தாதிபதே
துரித துரீஹ துராசய துர்மதி தானவதூத க்ருதாந்தமதே (ஜய ஜய)

அயிசரணாகத வைரிவ தூவர வீர வராபய தாயகரே
த்ரிபுவன மஸ்தக ஸூல விரோதி ஸிரோதி க்ருதாமல ஸூலகரே
துமி துமிதாமர துந்துபிநாத மஹோ முகரீ க்ருத திக்மகரே (ஜய ஜய)

அயி நிஜ ஹுங்க்ருதி மாத்ர நிராக்ருத தூம்ர விலோசந தூம்ரஸுதே
சமர விசோஷித சோணித பீஜ ஸமுத்பவ சோனிதபீஜலதே
சிவ சிவ சும்ப நிசும்ப மஹாஹவ தர்பித பூத பிசாசரதே (ஜய ஜய)

தனுரனு ஸங்கரணக்ஷண ஸங்க பரிஸ்பர தங்க நடத்கடகே
கனக பிஸங்க ப்ருஷத்க நிஷங்க ரஸத்பட ஸ்ருங்க ஹதாவடுகே
க்ருத சதுரங்க பலக்ஷிதரங்க கடத் பஹுரங்க நடத்படுகே (ஜய ஜய)

ஜய ஜய ஜப்ய ஜயே ஜய சப்த பரஸ் துதி தத்பர விச்வநுதே
பணபண பிஞ்ஜமி பிங்க்ருத நூபுர ஸிஞ்சித மோஹித பூதபதே
நடித நடார்த நட நடநாயக நாடித நாட்யஸுகானரதே (ஜய ஜய)

அயிஸுமன : ஸுமன : ஸுமன : ஸுமன : ஸுமனோஹர காந்தியுதே
ஸ்ரித ரஜனீ ரஜனீ ரஜனீ ரஜனீ ரஜனீகர வக்த்ரவ்ருதே
ஸுநயன விப்ரமர ப்ரமர ப்ரமர ப்ரமர ப்ரமராதிபதே (ஜய ஜய)

ஸஹித மஹாஹவ மல்லம தல்லிக மல்லித ரல்லக மல்லரதே
விரசி வல்லிக பல்லிக மல்லிக பில்லிக பில்லிக வக்ரவ்ருதே
ஸிதக்ருத புல்லஸ முல்லஸி தாருண தல்லஜ பல்லவ ஸல்லலிதே (ஜய ஜய)

அவிரலகண்ட கலந்மத மேதுர மத்தம தங்கஜ ராஜபதே
த்ரிபுவன பூஷண பூத கலாநிதிரூப பயோநிதி ராஜஸுதே
அயி ஸுததீஜன லாலஸ மானஸ மோஹன மன்மத ராஜஸுதே (ஜய ஜய)

கமல தலாமல கோமளகாந்தி கலாகலி தாமல பாலலதே
ஸகல விலாஸ கலா நிலயக்ரம கேலிசலத்கல ஹம்ஸகுலே
அலிகுல ஸங்குல குவலய மண்டல மௌலிமிலத் பகுலாலி குலே (ஜய ஜய)

கரமுரளீ ரவ வீஜித கூஜித லஜ்ஜித கோகில மஞ்ஜுமதே
மிலிதபுலிந்த மனோஹர குஞ்ஜித ரஞ்சித சைல நிகுஞ்ஜகதே
நிஜகுண பூத மஹாஜபரீ கண சத்குண ஸம்ப்ருத கேலிதலே (ஜய ஜய)

கடிதடபீத துகூல விசித்ரமயூக திரஸ்க்ருத சந்த்ரருசே
ப்ரணதஸு ராஸுர மௌலிமணி ஸ்புரதம் ஸுலஸ்ந்நக சந்த்ரருசே
ஜிதகநகாசல மௌலிப தோர்ஜித நிர்பர குஞ்ஜர கும்பகுசே (ஜய ஜய)

விஜித ஸகஸ்ர கரைக ஸகஸ்ரகரைக ஸகஸ்ர கரைகனுதே
க்ருதஸுர தாரக சங்கர தாரக சங்கர தாரக ஸுனுஸுதே
ஸுரத ஸமாதி ஸமாந ஸமாதி ஸமாதி ஸமாதி ஸுஜாதரதே (ஜய ஜய)

பத கமலம் கருணாநிலயே வரிவஸ்யதியோனு தினம் ஸசிவே
அயி கமலே கமலா நிலயே கமலா நலய: ஸகதம் நபவேத்
தவ பதமேவ பரம் பத மித்யநு சீலயதோ மமகிம் ந சிவே (ஜய ஜய)

கன கலஸத்கல ஸிந்து ஜலை ரநு ஸிஞ்சினு தேகுண ரங்க புவம்
பஜதி ஸகிம் நஸசீ குச கும்ப தடீபரிரம்ப ஸுகாநுபவம்
தவ சரணம் சரணம் கரவாணி நதாமரவாணி நிவாஸிசிவம் (ஜய ஜய)

தவ விமலேந்து குலம் வதநேந் துமலம் ஸகலம் நநு கூலயதே
கிமு புருஹூத புரிந்துமுகீ ஸுமுகி பிரஸௌ விமுகீ க்ரியதே
மமது மதம் சிவநாம தநே பவதீ க்ருபயா கிமுதக்ரியதே (ஜய ஜய)

அயிமயீ தீன தயாளு தயா க்ருபயைவ த்வயா பலிதவ்யமுமே
அயி ஜகதோ ஜநநீ க்ருபயாஸியதாஸி ததா நுமி தாஸி ரதே
யது சிதமத்ர பவத்யூரரீ குருதா துருதாப மபா குருதே
ஜய ஜய ஹே மஹிஷாஸுர மர்தினி ரம்யக பர்தினி சைலஸுதே

## துக்க நிவாரணி

மங்கள ரூபிணி மதியணி சூலினி மன்மத பாணியளே
சங்கடம் நீங்கிடச் சடுதியில் வந்திடும் சங்கரி சௌந்தரியே
கங்கண பாணியன் கனிமுகங்கண்டநல் கற்பகக் காமினியே
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி

கானுறு மலரேனக் கதிர்ஒளி காட்டிக் காத்திட வந்திடுவாள்
தானுறு தவ ஒளி தாரொளி மதியொளி தாங்கியே வீசிடுவாள்
மானுறு விழியாள் மாதவர் மொழியால் மாலைகள் சூடிடுவாள்
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி

சங்கரி சௌந்தரி சதுர்முகன் போற்றிடச் சபையினில் வந்தவளே
பொங்கரி மாவினில் பொன்னடி வைத்துப் பொருந்திட வந்தவளே
எங்குலந் தழைத்திட எழில்வடிவுடனே எழுந்தருள்
துர்க்கையவளே
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி

தணதண தந்தண தவிலொலி முழங்கிடத் தண்மணி நீவருவாய்
கணகண கங்கண கதிர்ஒளி வீசிடக் கண்மணி நீ வருவாய்

பணபண பம்பண பறையொலி கூவிடப் பண்மணி நீ வருவாய்
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி

பஞ்சமி பைரவி பர்வதபுத்திரி பஞ்சநல் பாணியளே
கொஞ்சிடும் குமரனைக் குணமிகு வேழனைக் கொடுத்தநல்
குமரியளே

சங்கடம் தீர்த்திடச் சமரது செய்தநற் சக்தியெனும் மாயே
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்க நிவாரணி காமாக்ஷி

எண்ணியபடி நீ யருளிட வருவாய் எங்குல தேவியளே
பண்ணிய செயலின் பலனது நலமாய்ப் பல்கிட அருளிடுவாய்

கண்ணொளியதனால் கருணையே காட்டிக் கவலைகள்
தீர்ப்பவளே
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி.

இடர்தரும் தொல்லை இனிமேல் இல்லை என்று நீ
சொல்லிடுவாய்
சுடர்தரும் அமுதே சுருதிகள் கூறிச் சுகமதை தந்திடுவாய்
படர்தரும் இருளில் பரிதியாய் வந்து பழவினை ஓட்டிடுவாய்
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி

ஜெய ஜெய பாலா சாமுண்டேஸ்வரி ஜெய ஜெய ஸ்ரீ தேவி
ஜெய ஜெய துர்க்கா ஸ்ரீ பரமேஸ்வரி ஜெய ஜெய ஸ்ரீ தேவி
ஜெய ஜெய ஜெயந்தி மங்கள காளி ஜெய ஜெய ஸ்ரீ தேவி
ஜெய ஜெய சங்கரி கௌரிக்ருபாகரி துக்கநிவாரணி காமாக்ஷி

## ராகு கால துர்காஷ்டகம்

வாழ்வு ஆனவள் துர்கா வாக்குமானவள்
வானில் நின்றவள் இந்த மண்ணில் வந்தனள்
தாழ்வு அற்றவள் துர்கா தாயும் ஆனவள்
தாகம் நீக்கியே என்னைத் தாங்கும் துர்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்கையே

உலகையீன்றவள் துர்கா உமையுமானவள்
உண்மையானவள் எந்தன் உயிரைக் காப்பவள்
நிலவில் நின்றவள் துர்கா நித்யையானவள்
நிலவி நின்றவள் எந்தன் நிதியும் துர்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்கையே

செம்மையானவள் துர்கா ஜெபமும் ஆனவள்
அம்மையானவள் அன்பு தந்தையானவள்
இம்மையானவள் துர்கா இன்பமானவள்
மும்மையானவள் என்றும் முழுமை துர்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்கையே

உயிருமானவள் துர்கா உடலுமானவள்
உலகமானவள் எந்தன் உடமையானவள்
பயிருமானவள் துர்கா படரும் கொம்பவள்
பண்பு பொங்கிட என்னுள் பழுத்த துர்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்கையே

துன்பமற்றவள் துர்கா தூரிய வாழ்பவள்
துறையுமானவள் இன்ப தோணியானவள்
அன்பு உற்றவள் துர்கா அபயவீடவள்
நன்மை தங்கிட என்னுள் நடக்கும் துர்கையே
தேவி துர்க்கையே ஜெய தேவி துர்கையே

குருவுமானவள் துர்கா குழந்தையானவள்
குலமுமானவள் எங்கள் குடும்ப தீபமே
திருவுமானவள் திரிசூலி மாயவள்
திருநீற்றில் நின்றிட என்னுள் திகழும் துர்கையே
தேவி துர்கையே ஜெய தேவி துர்கையே

ராகு தேவனின் பெரும் பூஜை ஏற்றவள்
ராகு நேரத்தில் என்னைத் தேடி வருபவள்
ராகு காலத்தில் எந்தன் தாயை வேண்டினேன்
ராகு துர்கையே என்னைக்காக்கும் துர்கையே
தேவி துர்கையே ஜெய தேவி துர்கையே

கன்னி துர்கையே இதய கமல துர்கையே
கருணை துர்கையே வீர கான துர்கையே
அன்னை துர்கையே என்றும் அருளும் துர்கையே
அன்பு துர்கையே ஜெய துர்கை துர்கையே
தேவி துர்கையே ஜெய தேவி துர்கையே

## அன்னையின் வருகை

வருகிறாள் வருகிறாள் அன்னை சக்தி வருகிறாள்
வருகிறாள் வருகிறாள் ஆதிசக்தி வருகிறாள்
பாவம் எல்லாம் தீர்ப்பதற்கு பராசக்தி வருகிறாள்
பக்தர்களைக் காப்பதற்கு பத்ரகாளி வருகிறாள்

இன்னல் எல்லாம் தீர்ப்பதற்கு இச்சா சக்தி வருகிறாள்
கீர்த்தியோடு புகழ் வழங்கிட கிரியாசக்தி வருகிறாள்
ஞான மழையை பொழிவதற்கு ஞானசக்தி வருகிறாள்
நம்பும் நம்மை காப்பதற்கு தேவி ஓடி வருகிறாள்

சமயபுரத்தில் வாழும் அம்மை சாந்தி வழங்க வருகிறாள்
சஞ்சலங்கள் தீர்ப்பதற்கு சாம்பவியும் வருகிறாள்
சோட்டானிக்கரை பகவதியும் சோகம் தீர்க்க வருகிறாள்
சொர்க்க போக வாழ்வை வழங்க தேவி ஆடி வருகிறாள்

மாயை விலகி மனம் திருந்த மகாதேவி வருகிறாள்
மாதுளம் பூமேனி கொண்ட மகாகாளி வருகிறாள்
மோகம் எல்லாம் மறைவதற்கு மூகாம்பிகை வருகிறாள்
முக்தி நலம் தந்திடவே சக்தி ஓடி வருகிறாள்

பஞ்சம் ஓட பாவம் ஓட பஞ்ச பாணி வருகிறாள்
பாம்பணிந்த பரமனோடு பார்வதியாள் வருகிறாள்
மஹிடன் தலையின் மீதிலேறி துர்கையாக வருகிறாள்
மலைமகளாய் கலைமகளாய் அலைமகளாய் வருகிறாள்

## ஸ்ரீ துர்கா ஸ்தோத்திரம்

எப்பேர்ப்பட்ட கஷ்டங்களிலிருந்து விடுபடவும் எண்ணியது எண்ணியபடி நடக்கவும், கலிகாலப் பிரத்யட்ச தெய்வமான துர்கையை செவ்வாய்க்கிழமை ராகு காலத்தில் (மாலை 3 மணி முதல் 4-30) வழிபடுவது பிரத்யட்ச பலனைத் தருகிறது. ஆயலத்திலுள்ள துர்கை சந்நிதியில் பின்கண்ட ஸ்லோகத்தை சொல்வது நல்லது. ஒன்பது செவ்வாய்க் கிழமைக்குள்ளேயே கோரியது நடைபெறுகிறது என்பது பலருடைய அனுபவத்தில் நடந்துள்ளது.

### தியானம்

தேவீம் ஷோடச வர்ஷியாம் ஸு஼ஸ்திர யௌவனாம்
பிம்போஷ்டீம் ஸு஼ததீம் சுத்தாம் சரத்பத்ம நிபாநநாம்
ஸ்வேச சம்பக வர்ணாம் ஸு஼நீலோத்பல லோசநாம்
ஜகத்தாத்ரீம் சதாத்ரீம் ச ஸர்வேப்ய: ஸர்வ ஸம்பதாம்
ஸம்ஸார ஸாகரே கோரே ஜோதி ரூபாம் ஸதாபஜே
தேவ்யாஸ்ச த்யான மித்யேவம் ஸ்தவநம் ச்ருயதாம் முனே

### மஹாதேவ உவாச

ரக்ஷரக்ஷ ஜகந்மாத : தேவி மங்கள சண்டிகே
ஹாரிகே விபதாம் ரசே : ஹர்ஷ மங்களகாரிகே
ஹர்ஷ மங்கள தக்ஷேச ஹர்ஷ மங்களதாயிகே
சுபே மங்கள திக்ஷேசி சுபே மங்கள சண்டிகே
மங்கள ம்ங்களார் ஹேச ஸர்வ மங்கள மங்களே
ஸதாம் மங்களே தேவி ஸர்வேஷாம் மங்களாலயே

பூஜ்ய மங்கள வாரே ச மங்களாபூஷ்ட தேவதே
பூஜ்ய மங்கள பூபஸ்ய மநு வம்சஸ்ய ஸந்ததம்
மங்களா திஷ்டாத்ரு தேவி மங்களாம் ச மங்களே
ஸம்ஸார மங்களாதாரே மோக்ஷ மங்கள தாயினி
ஸாரே ச மங்களதாரே பாரே ஸர்வ கர்மணாம்
ப்ரதி மங்கள வாரே ச பூஜ்ய மங்கள சுகப்ரதே

பல ச்ருதி

ஸ்தோத்ரேணா நேக சம்பிஸ்ச ஸதுத்வா மங்களா சண்டிகாம்
பிரதி மங்களவாரே ராகு காலேள ச பூஜாம் தத்வா கத: சிவ
தேவ்யாஸ்ச மங்கள ஸ்தோத்திரம் ய : ஸ்ருணோதி ஸமாஹித :
தத் மங்களம் பவேத் தஸ்ய நபவேத் தத் மங்களம்
வர்த்ததே புத்ர பௌத்ரஸ்ச மங்களம் ச திநே திநே

## ஸ்ரீ துர்காஷ்டோத்தர சத நாம ஸ்தோத்ரம்

ஈச்வர உவாச
ஸதநாம ப்ரவக்ஷ்யாமி ஸ்ருணுஷ்வ கமலாநதே
யஸ்ய ப்ரசாத மாத்ரேண துர்கா ப்ரீதா பவேத் ஸதீ

ஸதீ ஸாத்வீ பவப்ரீதா பவாநீ பவமோசநீ
ஆர்யா துர்க்கா ஜயா சாத்யா த்ரிநேத்ரா ஸூலதாரிணி

பிநாகதாரிணீ சித்ரா சண்ட கண்டா மஹாதபா;
மநோ புத்திர ஹங்கார தித்தரூபா சிதாசிதி

ஸர்வ மந்த்ரமயீ ஸத்யா ஸத்யாநந்த ஸ்வரூபிணீ
அநந்தா பாவனீ பாவ்யா பவா பவ்யா ஸதாகதி

ஸாம்பவீ தேவமாதா ச சிந்தா ரத்நப்ரியா ஸதா
ஸர்வ வித்யா தக்ஷகந்யா தக்ஷயஜ்ஞ விநாஸிநீ

அபர்ணா நேகவர்ணா ச பாடலா பாடலாவதீ
பட்டாம்பர பரீதாநா கலமஞ்ஜீர ரஞ்சிநீ

அமேயவிக்ரமா க்ரூரா ஸுந்தரீ குலஸுந்தரீ
வநதுர்கா ச மாதங்கீ மதங்க முநி பூஜிதா

ப்ராஹ்மீ மஹேஸ்வரி சைந்த்ரீ கௌமாரி வைஷ்ணவி ததா
சாமுண்டா சைவவாராஹீ லக்ஷ்மீம்ச புருஷாக்ருதி

விமலோத்கர்ஷிணீ ஜ்ஞாநா க்ரியா நித்யாச புத்திதா
பஹுளா பஹுளாப்ரேமா ஸர்வலாஹந வாஹநா

நிஸூம்ப ஸூம்பஹநநீ மஹிஷாஸூ ரமர்த்திநீ
மதுகைடப ஹந்த்ரீ ச சண்ட முண்ட விநாசிநி

ஸர்வாஸூர விநாஸா ஸ ஸர்வதாநவகாதி நி
ஸர்வஸாஸ்த்ரமயீ ஸத்யா ஸர்வாஸ்த்ர தாரிணீ ததா

அநேக ஸஸ்த்ர ஹஸ்தாச அநேகாத்ரஸ்ய தாரிணீ
குமாரீ சைகந்யா ச கைசோரீ யுவதீ யதி :

அப்ரௌடா சைவ ப்ரௌடா ச வ்ருத்தமாதா பலப்ரதா
மாஹோதரீ முக்தகேஸி கோர ரூபா மஹாபலா

அக்நிஜ்வாலா ரௌத்ரமுகீ காலராத்ரி தபஸ்விநீ
நாராயணி பத்ரகாளி விஷ்ணுமாயா ஜடோதரி

சிவதூ தீ கராளிச அநந்தா பரமேஸ்வரி
காத்யாய நீ ச ஸாவித்ரீ ப்ரத்யஷாம் ப்ரஹ்மவாதி நீ
யஇதம் ப்ரபடேந்தித்யம் துர்க்கா நாம ஸதாஷ்டகம் :
நாஸாத்யம் வித்யதே தேவ தரிஷூலோகோஷூ பார்வதி

தனம் தாந்யம்ஸூ தம்ஜாயாம் ஹயம் ஹஸ்திநமேவச
சதுர்வக்த்ரம் ததா சாந்தே லபேந்முக்திம் ஸஸாஸ்வதீம்

குமாரீம் பூஜயித்வா து த்யாத் வா தேவி ஸூரே ஸ்வரீம்
பூஜயேத் பரயா பக்த்யா படேந்நாம ஸதாஷ்டகம்

தஸ்ய ஸித்திர் பவேத் தேவி ஸர்வை : ஸூரவரைரபி:
ராஜாநோ தாஸதாம் யாந்தி ராஜ்ய ஸ்ரிய மவாப்நுயாத்

கோரோசநாலக்தக குங்குமேந ஸிந்தூர கற்பூர மதுத்ரயேண
விலிக்ய யந்த்ரம் விதிநா விதிஜ்ஞோ பவேத் ஸதா
தாரயதேபுராரி

பௌர்மாவாஸ்ய நிஸாமக்ரே சந்த்ரே ஸதபிஷாம் கதே
விலிக்க ப்ரபடேத் ஸ்தோத்ரம் ஸம்பவேத் ஸம்பதாஸ்பதம்

இதி ஸ்ரீ துர்காஷ்டோத்ர சத நாம ஸ்தோத்ரம் ஸம்பூர்ணம்

## நவமங்களி பாராயணம்

காத்யாயநி மஹாமாயே பவாநி புவ்நேச்வரி
ஸம்ஸார ஸாகரே மக்நாத் உத்தர ஸ்ரீ க்ருபாமயி

தன்யோஹம் அதிபாக்யோஹம் பாவிதோஹம் மஹாத்மபி:
யத்பிருஷ்டம் ஸூமஹத் புண்யம் புராணம் வேதவித்க்ருதம்

நமோ தேவ்யை ப்ரக்ருத்யைச விதாத்ர்யை ஸததம் நம :
கல்யாண்யை காமதாயைச வ்ருத்யை ஸித்யை நமோ நம :

சச்சிதாநந்த ரூபிண்யை ஸம்ஸாராணயே நம
பஞ்ச க்ருதனய விதா த்ரைச புவநேச்வர்யை நமோ நம :

க்ரீடாதே லோகரசனா ஸகா தே சிந்மய : சிவ :
ஆஹா ரஸ்தே ஸதாநந்த : வாஸஸ்தே ஹ்ருதயம் மம

நமச்சிவாயை கல்யாண்யை சாந்த்யை புஷ்டயை நமோ நம
பகவத்யை நமோ தேவ்யை ருத்ராயை ஸததம் நம :

ஜய ஜய ஜயாதாரே ஜயசீலே ஜயப்ரதே
யக்ஞ ஸூகர ஜாயே த்வம் ஜயதேவி ஜயாவஹே

ஸுகதே மோக்ஷதேதேவி ப்ரஸந்நா பவஸுந்தரி
புஷ்பஸாரா நந்த நீயே துளஸீ கிருஷ்ண ஜீவநீ

நமஸ்தே துளஸீ ரூபே நமோ லக்ஷ்மி ஸரஸ்வதி
நமோ துர்கே பகவதி நமஸ்தே ஸர்வரூபிணி.

## ஸ்ரீ துர்கா ஸப்த ஸ்லோகீ

ஸ்ரீசிவ உவாச -
தேவி த்வம் பக்தி ஸுலபே
ஸர்வகார்ய விதாயினி
காலைள ஹி கார்ய ஸித்யர்த்த
முபயாம் ப்ரூஹி யத்நத : !!
தேவ்ய உவாச -
ச்ருணா தேவ ப்ரவக்ஷ்யாமி
கலௌ ஸர்வேஷ்ட ஸாதனம்
மயா தவை ஸ்நேஹேனா
ப்யம்பா ஸ்துதி ப்ரகாச் யதே !!
ஓம் அஸ்ய ஸ்ரீதுர்கா ஸப்த ஸ்லோகீ
ஸ்தோத்ர மந்த்ரஸ்ய நாராயண ருஷி :
அனுஷ்டுப் சந்த : ஸ்ரீ மஹாகாளி,
மஹா லஷ்மீ, மஹா ஸரஸ்வத்யோ தேவதா :
ஸ்ரீ துர்கா ஸப்த ஸ்லோகீ பாடே வினியோக :

ஞானி நாபமி சேதாம்ஸி
தேவி பகவதீ ஹிஸா
பாலாதாக்ருஷ்ய மோஹாய
மஹாமாயா ப்ரயச்சதி

துர்கேஸ்ம்ருதா ஹாஸி
பீதி மசேஷ ஜந்தோ:
ஸ்வஸ்தை: ஸம்ருதா மதி
மதீவ சுபாம் ததாஸி !
தாரித்ரிய துக்க பய ஹாரிணி
கா த்வதன்யா
ஸர்வோபகார கரணாய
ஸதார்த்ரசித்தா !!
ஸர்வமங்கல மாங்கல்யே
சிவே ஸர்வார்த்த ஸாதிகே!
சரண்யே த்ரயம்பகே கௌரி
நாராயணி நமோஸ்துதே !!
சரணாகத தீனார்த்த
பரித்ராண பராயணே !
ஸர்வஸ்யார்த்தி ஹரா தேவி
நாராயணி நமோஸ்துதே !!
ஸர்வ ஸ்வரூபே ஸர்வேசே
ஸர்வ சக்தி ஸமன்விதே !
பயேப்ய த்ராஹிநோ தேவி
துர்கே தேவி நமோஸ்துதே !!
ரோகான் அசேஷான்
அபஹம்ஸி துஷ்டா
ருஷ்டாது காமான்
ஸகலான் அபீஷ்டான் !
த்வாம் ஆச்ரிதானாம்
நவிபந் நரானாம்
த்வாம் ஆச்ரிதா ஹி
ஆச்ரயதாம் ப்ரயாந்தி !!
ஸர்வ பாதா ப்ரசமனம்
த்ரைலோக்யஸ்ய அகிலேஸ்வரி
ஏவமேவ த்வாயா கார்யம்
அஸ்மத் வைரி வினாசனம் !!
ய யேதத் பரமம் குஹ்யம்
ஸர்வ ரக்ஷா விசாரதம்
தேவ்யா ஸம்பாஷிதம்
ஸ்தோத்ரம் ஸதா ஸாம்ராஜ்ய தாயகம் !!

## ரோக நிவாரண அஷ்டகம்

ச்ருணு யாத்மா படேத் வாபி
பாடயேத் வாபி யத்னத:
பரிவார யுதோ பூத்வா
த்ரைலோக்ய விஜயீ பவேத்

பகவதி தேவி பர்வத தேவி
பலமிகு தேவி துர்கையளே
ஜெகமது யாவும் ஜெய ஜெய வெனவே
சங்கரியுன்னைப் பாடிடுமே
தகதக ஹநஹந பசபச வெனவே
தளிர்த்திரு ஜோதியானவளே
ரோக நிவாரணி
சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா!

தண்டினி தேவி தட்சிணி தேவி
கட்கினி தேவி துர்கையளே
தந்தண தாண தனதன தாண
தாண்டவ நடன ஈஸ்வரியே
முண்டினி தேவி முனையொளி சூலி
முனிவர்கள் தேவி மணித்தேவி
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா!

காளினி நீயே காமினி நீயே
கார்த்திகை நீயே துர்கையளே
நீலினி நீயே மாதினி நீயே
நீர் நிதி நீயே நீர் ஒளியே
மாலினி நீயே மா நினி நீயே
மாதவி நீயே மான் விழியே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா !

நாரணி மாயே நான்முகன் தாயே
நாகுணியாயே துர்கையளே
ஊரணி மாயே ஊற்று தாயே
ஊர்த்தவ யாயே ஊர்ஒளியே
தாரணி மாயே காருணி தாயே
கானக யாயே காசினியே தாயே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா !

திருமகளானாய் கலைமகளானாய்
மலைமகளானாய் துர்கையளே
பெருநிதியானாய் பேரறிவானாய்
பெறாவளவானாய் பெண்மையளே
தருமலரானாய் நல்லவளானாய்.
நந்தினியானாய் நங்கையளே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா !

வேதமும் நீயே வேதியள் நீயே
வேதமும் நீயே துர்க்கையளே
நாதமும் நீயே நாற்றிசை நீயே
நாணமும் நீயே நாயகியே
மாதமும் நீயே மாதவம் நீயே
மானமும் நீயே மாயவளே
ரோக நிவாரணிசோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா !

கோவுரை ஜோதி கோமள ஜோதி
கோமதி ஜோதி துர்கையளே
நாவுரை ஜோதி நாற்றிசை ஜோதி
நாட்டிய ஜோதி நாச்சியளே
பூவுரை ஜோதிபூரண ஜோதி
பூததற் ஜோதி பூரணையே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா !

ஜெய ஜெய சைல புத்திரி ப்ரஹ்ம
சாரிணி சந்தர கண்டினியே
ஜெய ஜெய கூஷ் மாண்டினி கந்த
காதினி காத்யா யன்யளே
ஜெய ஜெய காலா ராத்திரி கௌரி
ஸித்திதா ஸ்ரீ நவ துர்கையளே
ரோக நிவாரணி சோக நிவாரணி
தாப நிவாரணி ஜெய துர்கா !

## செவ்வாய்க் கிழமை துதி

செவ்வாய்கிழமை நாள்தோறும்
மங்கையர் யாவரும் கூடிடுவோம்
மங்கள தீபத்தை ஏற்றிடுவோம்
நாம் இனிமையுடன் வரம் கேட்டிடுவோம் (செவ்வாய்)

பலப்பல மலர்களைப் பறித்திடுவோம்
பலப்பல பூஜைகள் செய்திடுவோம்
பலப்பல வரங்களை கேட்டிடுவோம்
ஸ்ரீ விஷ்ணு துர்கையைத் துதித்திடுவோம் (செவ்வாய்)

சுந்தர வதனி மீனாட்சி
சுகுண மனோகரி காமாட்சி
விஜயம் செய்வாள் விசாலாட்சி
வீணையை மீட்டுவாள் சரஸ்வதி (செவ்வாய்)

ராஜராஜேஸ்வரி நமஸ்காரம்
லலிதாம்பிகையே நமஸ்காரம்
துர்கா லட்சுமியே நமஸ்காரம்
புவனேஸ்வரியே நமஸ்காரம் (செவ்வாய்)

அன்னப்பூர்ணேஸ்வரி நமஸ்காரம்
காமேஸ்வரியே நமஸ்காரம்
பக்தியுடன் உன்னை நாடி வந்தோம்
பண்புடனே உன்னைப் பார்க்க வந்தோம் (செவ்வாய்)

வருவாய் வருவாய் நீயம்மா
தருவாய் தருவாய் சுகம் தருவாய்
அம்மா நீ என்னைக் கைவிடாமல்
ஆசிகள் கூறி அனுப்புவாயே (செவ்வாய்)

ஏகாம்பரேஸ்வரி என்றும் நீயே
ஏழை என்னை ஏற்றுக் கொள்வாய்
என்றும் உன்னை மறவேனே
ஏகாந்த முடனே ஏற்றுக் கொள்வாய் (செவ்வாய்)

அம்மா தாயே சரணம் அம்மா
அன்பால் என்னை அணைத்துக் கொள்வாய்
ஆதிபராசக்தி நீயம்மா
அருளைக் கொடுத்துக் காப்பாயே (செவ்வாய்)

## வெள்ளிக்கிழமை துதி

வெள்ளிக்கிழமை நாள்தோறும்
மாதர்கள் எல்லாம் கூடிடுவோம்
மங்கள தீபத்தை ஏற்றிடுவோம்
அன்னையின் அருளை நாடிடுவோம் (வெள்ளி)

நறுமண மலர்களைச் சூட்டிடுவோம்
பலபல கவிதைகள் பாடிடுவோம்
உள்ளம் உருகியே பாடிடுவோம்
உமையாள் பாதத்தை நாடிடுவோம் (வெள்ளி)

கற்பகவல்லியைப் பாடிடுவோம்
கவலைகள் யாவையும் நீக்கிடுவோம்
அம்பிகை புகழை பாடிடுவோம்
அன்னையின் அருளை நாடிடுவோம் (வெள்ளி)

சண்பகவல்லியைப் பாடிடுவோம்
சஞ்சலம் யாவையும் நீக்கிடுவோம்
காஞ்சி காமாட்சியைப் பாடிடுவோம்
கர்மவினைகளை நீக்கிடுவோம் (வெள்ளி)

மதுரை மீனாட்சியைப் பாடிடுவோம்
மனத்துயர் யாவையும் நீக்கிடுவோம்
ஓங்கார ரூபியைப் பாடிடுவோம்
ஸ்ரீ சக்ர ரூபியை அடைந்திடுவோம் (வெள்ளி)

சரணம் சரணம் சங்கரியே
அபயம் அபயம் அம்பிகையே
மங்கள ரூபியே நமஸ்காரம்
மகிஷ சம்ஹாரியே நமஸ்காரம் (வெள்ளி)

கருமாரிதேவியே நமஸ்காரம்
காசி விசாலாட்சி நமஸ்காரம்
சமயபுரேஸ்வரி நமஸ்காரம்
அன்னபூரணேஸ்வரி நமஸ்காரம் (வெள்ளி)

அன்னை அபிராமி நமஸ்காரம்
அருள் புவனேஸ்வரி நமஸ்காரம்
அகிலாண்டேஸ்வரி நமஸ்காரம்
ஆதிபராசக்தி நமஸ்காரம் (வெள்ளி)

மரகதவல்லியே நமஸ்காரம்
வைஷ்ணவி தேவியே நமஸ்காரம்
துன்பம் துடைப்பவளே நமஸ்காரம்
துர்க்கா தேவியே நமஸ்காரம் (வெள்ளி)

ஜோதி ஸ்வரூபிணியே நமஸ்காரம்
ஸ்வர்ணஸ்வரூபியே நமஸ்காரம்
நித்திய ஸ்வரூபியே நமஸ்காரம்
நித்திய மங்கள நமஸ்காரம் (வெள்ளி)

கொடுப்பதை எல்லாம் கொடுப்பவளே - அருளை
நினைப்பவர் உள்ளத்தில் ஜொலிப்பவளே
கருணையை விழிகளில் காட்டிடுவாள்
புன்னகை முகத்துடன் தோன்றிடுவாள் (வெள்ளி)

ஆயிரம் நாமத்தில் உதிப்பவளே
அன்பர் உள்ளத்தில் களிப்பவளே
அன்புடன் அருளை கொடுப்பவளே
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி நமஸ்காரம்
அநேக கோடி நமஸ்காரம் (வெள்ளி)

ஸ்ரீ விஷ்ணு துர்கா நமஸ்காரம்
அநேக கோடி நமஸ்காரம் (வெள்ளி)

## காட்சி தருதல்

காட்சி தந்து என்னை ஆட்சி செய்வாய் அம்மா
கல்யாணியே கற்பகமே அற்புத காட்சி
தந்து எம்மை ஆட்சிசெய்வாய் அம்மா !
மாட்சி எல்லாம் வாழ்வில் சேர்ந்திட கனிவுடன்
மண்ணிலே நின்றாடும் அம்பலவாணருடன் (காட்சி)

அங்கமொரு பாகமாய் அமைந்த என் தாயே
அனந்த மாமலையின் தேமதுரக் கனியே
மஞ்சள் குங்குமத்தில் மகிழ்ந்திடும் அம்மையே
மரகத மயிலுருவ தேவியே - தவத்திரு காட்சி
தந்து எம்மை ஆட்சி செய்வாய் அம்மா .....

## துர்கை சரணம்

ஜெய ஜெய தேவி ஜெய ஜெய தேவி துர்கா தேவி சரணம்:
ஜெய ஜெய தேவி ஜெய ஜெய தேவி துர்கா தேவி சரணம்

துர்கை அம்மனை துதித்தால் என்றும் துன்பம் பறந்தோடும்;
தர்மம் காக்கும் தாயாம் அவளை தரிசனம் கண்டால் போதும்
(துர்கை)

கர்ம வினைகளும் ஓடும் சர்வ மங்களம் கூடும்
(ஜெய ஜெய தேவி)

பொற்கரங்கள் பதினெட்டும் நம்மைச் சுற்றி
வரும்பகை விரட்டும் ; நெற்றியிலே குங்குமப்
பொட்டும் வெற்றி பாதையைக் காட்டும்;
ஆயிரம் கண்கள் உடையவளே; ஆதிசக்தி அவள்
பெரியவளே; ஆயிரம் நாமங்கள் கொண்டவளே
தாய் போல் நம்மைக் காப்பவளே (ஜெய ஜெய தேவி)

சங்கு சக்ரம் வில்லும் அம்பும் மின்னும் வாளும்
வேலுடன் சூலமும் தங்கக்கைகளில் தாங்கி நிற்பாள்;
அம்மா தங்கக்கைகளில் தாங்கி நிற்பாள்; சிங்கத்தின்
மேல் அவள் வீற்றிருப்பாள்; திங்களை முடிமேல்
சூடி நின்றாள்; மங்கள வாழ்வும் தந்திடுவாள்
மங்கையர்கரசியும் அவளே எங்கள் அங்கயற்கண்ணியும்
அவளே கனக துர்க்கா தேவி சரணம் (ஜெய ஜெய தேவி)

## துர்க்கை

வீரசிங்கம் மேலிருக்கும்
துர்கா கையில் வேலிருக்கும்
வாழ்வினில் விளைந்திருக்கும்
வினைகள் யாவும் வேரறுக்கும் (வீர சிங்கம்)

விண்ணவரும் மன்னவரும்
எண்ணவரும் தெய்வமவள்
வரம் தரும் துர்காத் தாயை
வணங்குவோம் நாமெல்லாரும்
(வணங்குவோம் வீரசிங்கம்)

பதினெட்டு கையிருக்கும்
பார்வையிலே கனிவிருக்கும்
கருணையோ மனமுருகும்
அம்மாவை வணங்கிடுவோம் (வ) (வீரசிங்கம்)

பழவிளக்கேற்றி வைத்து
துர்கா பாதம் தான் துதிக்கும்
ஸ்திரிகளுக்கு துணையிருக்கும்
சாந்தி துர்கா தேவிக்கு
எந்த தெய்வம் இணையிருக்கும் (வீர சிங்கம்)

## ஆதிபராசக்தி

ஆதிபராசக்தி அவள் ஆடி வருகிறாள் - நம்
அங்கமெல்லாம் புல்லரிக்க அசைந்து வருகிறாள்
ஆதிசிவன் தன்னுடனே அழகாய் வருகிறாள்
ஆறுமுகம் கணபதியும் கூட வருகிறாள்

சர்ப்ப வடிவான எங்கள் சக்தி வருகிறாள்
ஜகத் ஜோதியாய் விளங்கும் எங்கள் தேவி வருகிறாள்
ஹரி ஹரனின் தாயாரான அன்னை வருகிறாள்
சொர்ணமயமான திவ்ய ரதம் ஏறி வருகின்றாள்

புற்றுருவாய் வந்த பரதேவி வருகிறாள்
புவனேஸ்வரி துர்க்கை மஹாலக்ஷ்மி வருகின்றாள்
ஆயிரம் கண்ணுடைய மாரி வருகின்றாள்
ஆதிசேஷன் குடை பிடிக்க அமர்ந்து வருகிறாள்

கண்கண்ட தெய்வம் கருமாரி வருகிறாள்
காலனை உதைத்து வேலால் காத்து வருகின்றாள்
மாம்பலத்தில் வாழும் முப்பாத்தம்மன் வருகிறாள்
மகிமை கொண்ட பெரிய பாளையத்து அம்மன் வருகிறாள்

தேனாம்பேட்டை ஆளவந்த அம்மன் வருகிறாள்
தேவி அங்காள பரமேஸ்வரி அம்மன் வருகிறாள்
தெய்வமாக இருந்து நம்மை காத்து வருகிறாள்
ஆடி மாத உத்சவத்தில் அழகாய் வருகிறாள்

ஆடிவந்து ஊரைக் காக்கும் தேவி வருகிறாள்
ஆனந்தமாய் மேடை மேலே இருந்து வருகிறாள்
அன்னை அலங்காரத்தில் இருந்து வருகிறாள்

கரகத்தின் மேலிருந்து காட்சி தருகிறாள்
கவலை எல்லாம் தீர்த்து தேவி வருகிறாள்
குங்கும காளி அம்மன் வருகிறாள்
சூலாயுதம் கொண்டு அம்மன் சுழற்றி வருகிறாள்

பொங்கல் வைத்து செய்யும் பூஜை பார்க்க வருகிறாள்
பொன்னும் பொருளும் தந்து நம்மை காத்து வருகிறாள்
மாவிளக்கு ஏற்றுவதைப் பார்த்து வருகிறாள்
மாங்கல்ய பாக்யத்தை அள்ளித் தருகிறாள்

நோய் நொடிகள் இல்லாமல் காத்து வருகிறாள்
பேய் பில்லி சூன்யங்களை விரட்ட வருகிறாள்
பிள்ளை செல்வம் தந்து நம்மை காத்து வருகிறாள்
பெருமையுடன் வாழவைக்கும் தேவி வருகிறாள்
(ஆதிபராசக்தி)

## அபிஷேக அர்ச்சனைப் பாடல்கள்

ரட்ச ரட்ச ஜெகன்மாதா சர்வ சக்தி ஜெய துர்கா
ரட்ச ரட்ச ஜெகன்மாதா சர்வ சக்தி ஜெய துர்கா (ரட்ச)

மங்கள வாரம் சொல்லிட வேண்டும் மங்கள
சண்டிகை சுலோகம்

இதை ஒன்பது வாரம் சொல்லுவதாலே உமையவள்
திருவருள் சேரும் உமையவள் திருவருள் சேரும் (ரட்ச)

படைப்பவள் அவளே காப்பவள் அவளே அழிப்பவள் அவளே
சக்தி; அபயம் என்றவளை சரண் புகுந்தாலே அடைக்கலம்
அவளே சக்தி

ஜெய ஜெய சங்கரி கௌரி மனோகரி அபயம்
அளித்தருள் அம்பிகை பைரவி
சிவ சிவ சங்கரி சக்தி மஹேஸ்வரி திருவருள் தருவாய் தேவி
திருவருள் தருவாய் தேவி (ரட்ச)

கருணையின் கங்கை கண்ணனின் தங்கை கடைக்கண்
திறந்தால் போதும் : வருகிற யோகம் வளர்பிறையாகும்
அருள் மழை பொழிவாள் நாளும்
நீல நிறத்தொடு ஞாலம் அளந்தவள் காளி எனத்
திரிசூலம் எடுத்தவள்

பக்தருக்கெல்லாம் பாதை வகுப்பவள் நாமம் சொன்னால்
நன்மை தருபவள் (நாமம் சொன்னால் நன்மை தருபவள்) (ரட்ச)

## ஸ்ரீ துர்கா சரணம்

சரணம் அம்மா சரணம் அம்மா சரணம் அம்மா சரணம்
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா சரணம் அம்மா சரணம்
திருசூலி நவகாளி சரணம் அம்மா சரணம்
மகிஷன் மேல் பதிந்திருக்கும் மலரடிகள் சரணம்
நவநீலி என விளங்கும் பகவதியே சரணம் (ஸ்ரீ துர்கா)

நன்மை தரும் நவராத்திரி முதல் வடிவே சரணம்
நவநவமாய் பொருள் படைக்கும் நவ துர்க்கா சரணம்
கன்னிகையே அம்பிகையே காமாட்சி சரணம்
கடும் பகைகள் முடிக்கும் எங்கள் கல்யாணி சரணம்
(ஸ்ரீ துர்கா)

சாந்தி துர்கா சாதவேத துர்கா தேவி சரணம்
சபரி துர்கா கால துர்கா வனதுர்கா சரணம்
ஆசரி துர்கா சூலினி துர்கா ஜெயதுர்கா சரணம்
தீப துர்கா திருஷ்டி துர்கா மூல துர்கா சரணம் (ஸ்ரீ துர்கா)

பத்ரகாளி மஹாகாளி சரசண்டிகை சரணம்
பைரவியே காலராத்ரி காளி அம்மா சரணம்
ஸ்ரீ சொரூப மயமுண்டி சாமுண்டி சரணம்
ஸ்ரீ சண்டி ஸ்ரீபவானி திருவடிகள் சரணம் (ஸ்ரீ துர்கா)

## அம்பிகையை அழைத்தல்

அம்பிகையே அம்பிகையே அன்புடனே வா வா
அச்சுதன் சகோதரியே பச்சை குமரியே வா வா
தங்க ஒட்டியானம் மின்ன
தங்கமே நீவா வா
தாமரைப் பொற்பாதச் சலங்கை
கல் என்று ஒலிக்க வா வா
முத்து நவ ரத்னமணி ஹாரம் ஒளிர வா வா
மோஹனப் பட்டாடை குலுங்க
மோஹினியே வாவா
அன்பு கொண்டோர் உள்ளத்திலே
ஆடியே நீவா வா
அருள் மழையே பொழிந்திடும் - என்
அன்னையே நீ வா வா (அம்பிகையே)

## அன்னையை அழைத்தல்

கூப்பிட கூப்பிட திரும்பிப் பாராமல்
இருப்பதென்ன அம்மா !
கொஞ்சம் திரும்பிப் பார்த்தால் என்ன
குறைந்தா போகும் அம்மா !
உன் புகழ் குறைந்தா போகும் அம்மா
கண்ணனின் சோதரி துர்க்கையளே /
கண்ணீருடன் நான் அழைக்கயிலே
பண்ணிய பாவங்கள் தொலைகையிலே
பரிவுடனே நீ வருவாய்
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா உன்னை (கூ)
சங்கும் சக்ரமும் தரித்தவளே
சங்கடங்கள்தனை தீர்ப்பவளே
அங்கம் குறுகி நான் தவிக்கையிலே
ஆறுதல் கூற நீ வருவாய்
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா உன்னை (கூப்பிட)

காசில்லாதவன் என் கையிலே
பாசமில்லா இந்தக் கூட்டத்திலே
நேசக்கரம் நீட்டி நீவந்தாயம்மா

ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா
ஸ்ரீ துர்கா ஜெயதுர்கா உன்னை (கூ)
ஏசி எல்லாரும் பேசுகையிலே

## அன்பின் வடிவம் அம்மா

அன்பின் வடிவம் துர்கா துர்கா
ஆனந்த உருவம் துர்கா துர்கா
இன்ப ஒளியே துர்கா துர்கா
ஈடில்லா ஜோதியே துர்கா துர்கா
உண்மையின் உருவே துர்கா துர்கா
ஊமையை பேச வைப்பாள் துர்கா துர்கா

எங்களின் தாயே துர்கா துர்கா
ஏழைகளின் தெய்வமே துர்கா துர்கா
ஐயங்களைத் தீர்ப்பவளே துர்கா துர்கா
ஒன்றில் மூன்று சக்தியாம் துர்கா துர்கா
ஓங்காரி சங்கரி துர்கா துர்கா
ஔஷதம் ஆனவளே துர்கா துர்கா
அஃறிணைப் பொருளும் துர்கா துர்கா (அன்பின்)

## சர்வம் துர்கா மயம்

சர்வ தீர்த்தாத்மிகே சர்வ மந்த்ராத்மிகே
சர்வ தந்த்ராத்மிகே சர்வ பீடாத்மிகே
சர்வ தத்வாத்மிகே சர்வ சத்யாத்மிகே
சர்வ வித்யாத்மிகே சர்வ யோகாத்மிகே
சர்வ வர்ணாத்மிகே சர்வ நாதாத்மிகே
சர்வ சப்தாத்மிகே சர்வ விஸ்வாத்மிகே
சர்வ ஹே ஜெகன்மாத்ருகே பாஹிமாமம் பாஹிமாம்
துர்கா தேவி துப்யம் நமோ
துர்கா தேவி துப்யம் நமோஸ்துதே

## உத்சவ பாடல்

துர்கா உத்சவ் வைபோகமே
லட்சுமி உத்சவ வைபோகமே
வசுதேவ தவபுத்திரி அசுரகுலவைரி
சசிவதன ரூபிணி சாந்த துர்கா தேவி (து)
கட்டோடு வாழைமரம் கொண்டு வந்து நிறுத்தி
கோப்புடைய அம்மனுக்கு மேல் பந்தல் இட்டு
கச்சிதமாம் பந்தலிலே உயர்ந்த சிம்மாசனத்தில்
கம்பீரமாய் துர்கை வந்து அமர்ந்தாள் (து)
சரஸ்வதியும் லட்சுமியும் இருபுறமும் நிற்க
சங்கரனார் மகிழ்ச்சியுடன் வைபவத்தைக் காண
பிரமனும் நாரணனும் மேற்பார்வை பார்க்க
இந்திரனும் ஏனைய தேவர்களும் காண
கின்னரர் கிம்புருடர் நாரதர் காண
யக்ஷர்கள் கந்தர்வர் அஷ்டதிக்பாலகர்
அஸ்வினி அருந்ததி முதலாய்
பத்தினிப் பெண்டிர்கள் பக்தியுடன் காண
பக்தரெலாம் மனமுருகிப் பாட்டுக்கள் பாட (து)

## அபிஷேகப் பாடல்

அபிஷேகம் நல் அபிஷேகம்
அன்னை துர்கைக்கு அபிஷேகம்
தர்மத்தின் தாயாம் அன்னைக்கு
தங்கக் குடத்தால் அபிஷேகம்
வேதனை போக்கும் அன்னைக்கு
வெள்ளி குடத்தால் அபிஷேகம்
பித்தனைபோற்றும் அன்னைக்கு
பித்தளை குடத்தால் அபிஷேகம்
செந்தழல் உருவாம் அன்னைக்கு
செப்புக் குடத்தால் அபிஷேகம் (அபிஷேகம்)

**கர்மவினை போக்கும் அன்னைக்கு**
**கங்கை நதி நீரால் அபிஷேகம்**

யாவரும் போற்றும் அன்னைக்கு
யமுனை நதி நீரால் அபிஷேகம்
கோலவிழியாள் அன்னைக்கு
கோதாவரி நதி நீரால் அபிஷேகம்
சத்ய ஜோதியாம் அன்னைக்கு
சரஸ்வதி நதி நீரால் அபிஷேகம்
நலங்களைத் தந்திடும் அன்னைக்கு
நர்மதை நதி நீரால் அபிஷேகம்
சித்ரூபியாம் அன்னைக்கு
சிந்து நதி நீரால் அபிஷேகம்
கவலையைப் போக்கிடும் அன்னைக்கு
காவேரி நதி நீரால் அபிஷேகம்
கிருஷ்ணனின் சோதரி அன்னைக்கு
கிருஷ்ணா நதி நீரால் அபிஷேகம் (அபிஷேகம்)

எங்களின் தாயாம் அன்னைக்கு
எலுமிச்சை சாறினால் அபிஷேகம்
சீதளா தேவியாம் அன்னைக்கு
சிகைக்காய் தூளினால் அபிஷேகம்
வாழ்வினைத் தந்திடும் அன்னைக்கு
வாசனைப் பொடியினால் அபிஷேகம்
இனியவளாம் என் அன்னைக்கு
இள நீராலே அபிஷேகம்
பங்கஜலோசனி அன்னைக்கு
பன்னீராலே அபிஷேகம்
தேவையைத் தந்திடும் அன்னைக்கு
தேனாலே அபிஷேகம்
மங்கலம் தந்திடும் அன்னைக்கு
மஞ்சளாலே அபிஷேகம்
சந்ததி தந்திடும் அன்னைக்கு
சந்தனத்தாலே அபிஷேகம்
பாவம் போக்கும் அன்னைக்கு பாலாலே அபிஷேகம்
தனங்களைத் தந்திடும் அன்னைக்கு
தயிராலே அபிஷேகம்
பவதாரிணி நம் அன்னைக்கு
பஞ்சாமிருதத்தால் அபிஷேகம்
சொன்னதைச் செய்திடும் அன்னைக்கு
சொர்ணத்தாலே அபிஷேகம் அபிஷேகம் (அபிஷேகம்)

## துர்கை அம்மனை அழைத்தல்

குங்கும அர்ச்சனை செய்பவர்க்கு அம்பாள்
கோடிக்கோடிப் பொன்னைக் கொடுப்பவளாம்
சந்தனத்தால் அபிஷேகம் செய்பவர்க்கு அம்பாள்
சர்வாபீஷ்டங்களும் கொடுப்பவளாம்

தேனால் அபிஷேகம் செய்பவர்க்கு அம்பாள்
திவ்ய தரிசனம் அளிப்பவளாம்
பாலால் அபிஷேகம் செய்பவர்க்கு அம்பாள் பல
ஜன்ம பாவத்தை போக்குவாளாம்

கனியால் அபிஷேகம் செய்பவர்க்கு அம்பாள்
கண்முன்னாலே வந்து நிற்பவளாம்
மனதால் எப்போதும் நினைப்பவர்க்கு அம்பாள்
மாங்கல்ய பாக்யம் அளிப்பவளாம்

மும்முறை வலம் வந்து தொழுபவர்க்கு அம்பாள்
முன்னின்று காத்தருள் செய்பவளாம்
அடிமேல் அடிவைத்து அவளை வலம் வந்தால்
அஷ்ட சம்பத்தும் அளிப்பவளாம்.

கற்பூர ஜோதியை காண்பவர்க்கு அம்பாள்
கைமேல் பலனை அளிப்பவளாம்.
தீராத வினைகளை தீர்ப்பவளாம் தேவி
திருவடிசரணம் சரணம் அம்மா

பவபயஹாரிணி அம்பா பவானி ஜெய
துக்க நிவாரணி துர்கே ஜெய ஜெய
கால வினாசினி காளி ஜெய் ஜெய
சத்ய ஸ்வரூபிணி மாதாகி ஜெய ஜெய

## அம்மா ஓடி வா

ஓடி வா துர்கையம்மா ஓடிவா அம்மா
உன்பாதம் தொழுதேன் ஓடிவா அம்மா
மானே மரகதமே ஓடிவா அம்மா
மல்லிகைப்பூ செண்பகமே ஓடிவா அம்மா
தேனே கற்கண்டே ஓடிவா அம்மா
தெவிட்டாத தெள்ளமுதே ஓடிவா அம்மா

உலகத்து நாயகியே ஓடிவா அம்மா
ஓம்கார நாரணியே ஓடிவா அம்மா
ஏழைகளைக் காத்திடவே ஓடிவா அம்மா
எங்கள் குலதெய்வமே ஓடிவா அம்மா
சிம்மவாகன தேவியே ஓடிவா அம்மா
திரி சூல தேவியே ஓடிவா அம்மா

சாந்தஸ்வரூபியே ஓடிவா அம்மா
சங்கடங்கள் தீர்க்கவே ஓடிவா அம்மா
பக்தர்களைக்காக்கவே ஓடிவா அம்மா
உன்பாத மலர் பணிந்தோம் ஓடிவா அம்மா
ஓடிவா அம்மா ஓடிவா அம்மா
ஓடிவா அம்மா ஓடிவா அம்மா

## புகழ் மாலை

துர்கா உனக்கு புகழ் மாலை
சூட்டுவதே தினம் முதல் வேலை
துர்கா உந்தன் திரிசூலம்
வணங்கிடத்தானே அதிகாலை (துர்கா)

பூவிதழ் அரளி மலருண்டு
எலுமிச்சை சாறு கனியுண்டு
பாதத்தில் பிழிந்திட பலனுண்டு
பூஜையை ஏற்பாய் நீ வந்து (துர்கா)

ஆலயம் என்பதும் நிழல்தானே
அதில் அணையா தீபம் உன் அருள்தானே
காலமும் துணையும் நீதானே
கருணையைப் பொழிவதும் நீதானே (துர்கா)

தேவி என்பதும் நீதானே
தோன்றிட நீதரும் திருக்காட்சி
மங்களம் வழங்கிடும் அருள் மாட்சி
மக்களைக் காப்பதும் உன் ஆட்சி (துர்கா)

## ஆடி வெள்ளிக்கிழமை பாடல்கள்

ஆடி வெள்ளிக்கிழமையன்று அம்மனுக்கு மஞ்சள் காப்பு
ஆதிசக்தி கருமாரியம்மனுக்கு அழகிய மஞ்சள் காப்பு
கூடி அவளைக் கும்பிடுவோர்க்கு கோடி நன்மைகள் பாரு
ஆடியில் அவளைக் கொண்டாடி ஆயிரம் நாமங்கள் கூறு

வேற்காட்டில் குடியிருக்கும் வேப்பிலைக்காரி
கூறும் அன்பர் குறை தீர்க்கும் கோவிந்தமாரி
தாரணியின் தாயவளே நாரணி ஓம்காரி
பாரெல்லாம் படியளக்கும் பரமசிவன் பாரி

குங்குமத்தில் குளித்து நிற்பாள் குங்குமக்காரி
மஞ்சளுடன் நிறைந்திருப்பாள் மங்கலமாரி
நெஞ்சார துதித்து நின்றால் அணைத்திடுவாள் வாரி
அன்னைபோல் காத்திடுவாள் ஆனந்த சுகுமாரி

வேலனுக்கு வேல் கொடுத்தாள் வேற்காடு கருமாரி
காலனையும் ஓடச்செய்வாள் காளி கருமாரி
கோலமிகும் வண்ணம் கொண்டாள் நீலி அலங்காரி
ஞாலத்தை ஆட்சி செய்யும் சூலிகருமாரி (ஞாலத்தை)
(ஆடி வெள்ளிக்கிழமை)

## ஆதிசக்தி நாயகி பாடல்கள்

ஆதிசக்தி நாயகியும் எங்கே எங்கே - அந்த
ஆலயமாம் சமயபுரம் அங்கே அங்கே
வேப்பிலை காரியம்மா வேதனைகள் தீருமம்மா
அன்னையே சரணமம்மா சமயபுரம் மாரியம்மா

சமயத்தில் காப்பவளும் எங்கே எங்கே - அந்த
சமயபுரம் போனாத்தெரியும் அங்கே அங்கே
பத்தினித் தெய்வமம்மா பக்தர்களை காப்பாயம்மா
அன்னையே சரணமம்மா சமயபுரம் மாரியம்மா

பூ மஞ்சள் காரியவள் எங்கே எங்கே - அந்த
புவிதாங்கும் சமயபுரம் அங்கே அங்கே
மங்கள நாயகியே மனமிரங்கி வாருமம்மா
அன்னையே சரணமம்மா சமயபுரம் மாரியம்மா

தர்மதாயின் கோவிலது எங்கே எங்கே - அந்த
தரிசனமே சமயபுரம் அங்கே அங்கே
மங்கையர் திலகமம்மா மங்காத தெய்வமம்மா
அன்னையே சரணமம்மா சமயபுரம் மாரியம்மா

குங்கும தாயுமவள் எங்கே எங்கே - அந்த
குடியிருக்கும் சமயபுரம் அங்கே அங்கே
எங்கள் குல தெய்வமம்மா தங்கத் திருமேனியம்மா
அன்னையே சரணமம்மா சமயபுரம் மாரியம்மா

திரிலோகம் காப்பவளாம் எங்கே எங்கே - அந்த
திரிச்சாம்பல் சமயபுரம் அங்கே அங்கே
திருவிளக்கு ஒளியிலம்மா திரிசூலி காளியம்மா
அன்னையே சரணமம்மா சமயபுரம் மாரியம்மா

## ஸ்ரீ துர்கை துதி

குங்குமத்தை அணிந்திருக்கும் துர்கை தாயே
என் குறைகளை தீர்க்க வருவாய் துர்கை தாயே
மஞ்சளையும் கொண்டிருக்கும் துர்கை தாயே
இங்கு மங்களமாய் வந்திடுவாய் துர்கை தாயே
(குங்குமத்தை)

நெய் விளக்கை ஏற்றி வைத்தேன் துர்கை தாயே
இங்கு நித்தம் என்னை காத்திடுவாய் துர்கை தாயே
கை விளக்காய் துணையிருப்பாய் துர்கை தாயே
என் கவலைகளை போக்கிடுவாய் துர்கை தாயே
(குங்குமத்தை)

மாலை ஒன்று கட்டி வைத்தேன் துர்கை தாயே
உன் திருவருளைக் காட்டிடுவாய் துர்கை தாயே
பால் பழங்கள் நான் படைத்தேன் துர்க்கை தாயே
அதன் பலனை எல்லாம் எனக்களிப்பாய் துர்கை தாயே
(குங்குமத்தை)

தேடி தேடி அலைந்திருந்தேன் துர்கை தாயே
உன் திருவருளைக் காட்டிடுவாய் துர்கை தாயே
பாடி அழுது ஏங்குகிறேன் துர்க்கை தாயே
இந்த பாலன் முகம் பார்த்தருள்வாய் துர்கை தாயே
(குங்குமத்தை)

## அம்மன் கொலு

ஸ்ரீ சக்கரம் தன்னில் அமர்ந்த சாந்தி துர்கா
சின்மயானந்த சிவ சாந்தி துர்கா
சிந்தாமணி மண்டபத்தில் கொலு இருந்தாள்
எங்கள் சிந்தையிலே வந்து கலந்திருந்தாள்
முத்துமணி மண்டபத்தில் கொலு இருந்தாள்
எங்கள் சிந்தையிலே வந்து கலந்திருந்தாள்

அலைமகள் கலைமகள் கீதம் பாட
நந்திகேஸ்வரரும் தாளம் போட
அரம்பை ஊர்வசியும் நர்த்தனம் ஆட
அந்தணர்கள் நான்மறை வேதங்கள் ஓத
தேவி சாந்தி துர்கா கொலு இருந்தாள்
ராஜ ராஜேஸ்வரி கொலு இருந்தாள் (ஸ்ரீ சக்கரம்)

சிம்ம வாகனத்தில் வீற்றிருக்க
செங்கரத்தில் அம்பும் வில்லும் தாங்கி இருக்க
ரத்ன மாலைகளும் பளபளக்க
நவரத்ன சிம்மாசனத்தில் கொலு இருந்தாள்
தேவி ராஜ ராஜேஸ்வரி கொலு இருந்தாள்
ஸ்ரீ சாந்தி துர்கா கொலு இருந்தாள் (ஸ்ரீ சக்கரம்)

சூரிய சந்திரர் ஒளி வீச
சங்கு சக்கரம் கையில் இருக்க
மாதர்கள் அனைவரும் புகழ் பாட
ஈஸ்வருடன் தேவி கொலு இருந்தாள்
தேவி ராஜ ராஜேஸ்வரி கொலு இருந்தாள்
ஸ்ரீ சாந்தி துர்கா கொலு இருந்தாள் (ஸ்ரீ சக்கரம்)

திருமால் சிவனும் நான்முகனும்
ஆறுமுகனுடன் கணபதியும்
தும்புரு நாரதர் உடன் கூட
முப்பத்து முக்கோடி தேவர் வணங்க
தேவி ராஜ ராஜேஸ்வரி கொலு இருந்தாள்
ஸ்ரீ சாந்தி துர்கா கொலு இருந்தாள் (ஸ்ரீ சக்கரம்)

## ஸ்துதி

ராஜேஸ்வரி அம்மா பரமேஸ்வரி
புவனேஸ்வரி அம்மா ஜகதீஸ்வரி (ராஜேஸ்வரி)

ஸ்ரீ சக்ர வடிவத்தில் ராஜேஸ்வரி
சிவசக்தி ரூபத்தில் பரமேஸ்வரி
ஓம் சக்தி ஓம் சக்தி புவனேஸ்வரி
உலகாளும் மஹாசக்தி ஜகதீஸ்வரி (ராஜேஸ்வரி)

அருளாளர் நெஞ்சங்கள் சிம்மாசனம்
அறுபத்து நான்கு கலை வெண்சாமரம்
ஒரு நான்கு வேதங்கள் சங்கீர்த்தனம்
ஓங்கார நாதமம்மா உன்தாண்டவம் (ராஜேஸ்வரி)

பூவுக்கும் பொட்டுக்கும் துணையானவள்
பொன் மஞ்சள் குங்குமத்தில் நிலையானவள்
சேவிக்கும் பெண்களுக்கு தாய் ஆனவள்
திருமாங்கல்யம் என்றும் வாழ்வானவள் (ராஜேஸ்வரி)

குளம் போல நெய்யூற்றி விளக்கேற்றுவோம்
கும்பத்தில் பிம்பத்தில் குடியேற்றுவோம்
வளம் யாவும் தர வேண்டி மலர் தூவுவோம்
மஹாராணி நீ என்று கவிபாடுவோம் (ராஜேஸ்வரி)

தீபத்தில் கொடி கொண்ட ராஜேஸ்வரி
திலகத்தில் முகம் காட்டும் ராஜேஸ்வரி
ஆபத்தில் ஓடிவரும் ராஜேஸ்வரி
அருள் செய்ய வேண்டும் அம்மா நீயே கதி (ராஜேஸ்வரி)

## நமஸ்காரம்

ஸ்ரீ சக்கர வாஸிநி ஸ்ரீதேவி நமஸ்தே
சிவகாமசுந்தரி "
ஸ்ரீ கிருஷ்ண ஸோதரி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

பத்மதள லோசனி ஸ்ரீதேவி நமஸ்தே
பக்த பரிபாலினி "
பர்வத வர்த்தினி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

கருணா விலாசினி "
காத்யாயினி கௌரி "
கதம்பவன வாஸினி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

சக்தி பரமேஸ்வரி "
சம்புமன மோஹினி "
சங்கரி மஹேஸ்வரி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

அன்னபூர்ணேஸ்வரி "
அகிலாண்ட நாயகி "
அபயப்ரதாயினி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

ஸத்யஸ்வ ரூபிணி "
ஸத்குரு ரூபிணி "
தர்மஸ்வ ரூபிணி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

அகண்ட பரிபூரணி "
ஆதிபராசக்தி "
அகில பரிபாலினி "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

அனாத ரக்ஷகி "
ஸௌபாக்கியதாயினி "
ஸந்தான பலப்ரதே "
ஸ்ரீ ராஜராஜேஸ்வரி "

பாஹி புவனேஸ்வரி "
ஸ்ரீ வித்யா ரூபிணி "
சக்தி ஸ்ரீ சாரதே "
ஸ்ரீ சாந்தி துர்கே "

## வைஷ்ணவி

வருவாய் வருவாய் வைஷ்ணவியே
தந்தருள் புரிவாய் வைஷ்ணவியே
அனுதினம் வருவாய் வைஷ்ணவியே
அனுக்ரஹம் செய்வாய் வைஷ்ணவியே

சரணடைந்தோம் வைஷ்ணவியே
சௌபாக்ய மருள்வாய் வைஷ்ணவியே
வரமளித்தருள்வாய் வைஷ்ணவியே
வணக்கம் தாயே வந்தருள்வாய்

பாடிப்பணிந்தோம் வைஷ்ணவியே
பக்ஷமுடன்வா வைஷ்ணவியே - நாங்கள்
கூடித் துதிக்கின்றோம் வைஷ்ணவியே
குறைகளைத் தீர்ப்பாய் வைஷ்ணவியே

திருமுல்லை வாயிலைத் தேடிவந்தோம் - உன்
திருசன்னதி முன் கூடி நின்றோம் - உன்
திருப்புகழ் தன்னைப் பாடுகின்றோம் - உன்
திருவடி நாடி பணிகின்றோம்.

## தேவி கன்யாகுமரி

தேவி கன்யாகுமரி பராசக்தி தேவி கன்யாகுமரி
தாவி வருகுதம்மா என் நெஞ்சம்
உன் தாளினை நாடுதம்மா
ஞால மெல்லாம் ஈன்ற
கன்னியென்ற நியாயம் உரைக்குதம்மா

ஞாயிறு திங்களெல்லாம் நின் திரு
ஞான வடிவின் ஒளி
பார்க்க வந்த என்னை தேவி நீ
பக்கத்தில் வாவென்று
நீ பார்த்த பார்வையிலே என் நெஞ்சம்
பாகாய் உருகிற்றம்மா (தேவி)

நீலக்கடலோரம் கன்னித்தாய்
நின்னைக் கண்ட பின்னர்
நானாவித உலகில் என் கண்கள்
நின்னையே நாடுதம்மா

பார்க்கும் இடம் தோறும்
நின்முக புன்சிரிப்புள்ளதம்மா
யார்க்கும் இனி அஞ்ச வேண்டாம்
உலகில் எல்லாம் உனது மயம்
தேகம் புனிதமாக தேவி உன்னைத்
தேடி அலைந்தேனே

மோகத்தை ஓட்டி விட்டாய்
இனி அகம்பாவம் துலைந்ததம்மா
கானத்தால் ஆளப்பெற்ற
என் ஜீவன் கசடற்ற தாயிற்றம்மா
மரணம் எனக்கில்லை என்றே
மனம் மகிழ்ந்து குதிக்குதம்மா

துர்க்குணம் என்ற மாயா
உலகை தூயதாய் காணவைத்தாய்
நிர்குணம் ஆக்கிவிட்டாய்
என்றென்றும் நீயாகவே இருப்பாய்
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்
பராசக்தி ஆனந்த சக்தி மயே
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம்
அன்னையே அன்னை கன்னியாகுமரி

## தேவியிடம் வேண்டுகோள்

ஸ்ரீ சக்ர ராஜ சிம்மாசனேஸ்வரி (ஸ்ரீசக்ர)
ஸ்ரீ லலிதாம்பிகையே புவனேஸ்வரி

ஆகம வேத கலாமயரூபிணி அகில சராசர ஜனனி
நாராயணி ; நாககங்கண நடராஜ மனோகரி
ஞான வித்யேஸ்வரி ராஜராஜேஸ்வரி (ஸ்ரீசக்ர)

பலவிதமாய் உன்னைப் பாடவும் ஆடவும் பாடிக்
கொண்டாடும் அன்பர் பதமலர் சூடவும்; உலகம் முழுவதும்
எனதகமுற காணவும் ஒருநிலை தருவாய் காஞ்சி காமேஸ்வரி
(ஸ்ரீசக்ர)

உழன்று திரிந்த என்னை உத்தமனாக்கி வைத்தாய்
உயரிய பெரியோருடன் ஒன்றிட கூட்டி வைத்தாய்
நிழல் என தொடர்ந்த முன்னூழ்க் கொடுமையை
நீக்க செய்தாய் ; நித்ய கல்யாணி பவானி பத்மேஸ்வரி (ஸ்ரீசக்ர)

துன்ப புடத்திலிட்டு தூயவன் ஆக்கிவைத்தாய்
தொடர்ந்த முன்மாயை நீக்கி பிறந்த பயனை தந்தாய்
அன்பை புகட்டி உந்தன் ஆடலைக் காணச் செய்தாய்
அடைக்கலம் நீயே அம்மா அகிலாண்டேஸ்வரி (ஸ்ரீசக்ர)

## பூப்பாடல்கள்

ரோஜாப்பூ கொண்டு வந்தே - எங்கள்
ராஜேஸ்வரியை பூஜை செய்தால்
தேசாதி தேசம் மெச்சும் ஒரு
ராஜா போல வாழச் செய்வாள்

முல்லைப்பூ கொண்டு வந்தே - எங்கள்
மோகனாங்கியை பூஜை செய்தால்
இல்லையென்று சொல்லாமலே தனம்
அள்ளி அள்ளி தந்திடுவாள்

மருக்கொழுந்து கொண்டு வந்தே - எங்கள்
மனோன்மணியை பூஜை செய்தால்
திருக்கோலம் கொண்டு அங்கே
தினந்தோறும் வந்து நிற்பாள்

ஜாதிப்பூ கொண்டு வந்தே - சுயம்
ஜோதி இவளை பூஜை செய்தால்
ஓதி உணரா வித்தை எல்லாம் தந்து
மேதை என்று ஆக்கிடுவாள்

மகிழம்பூ கொண்டு வந்தே - எங்கள்
மாதங்கியை பூஜை செய்தால்
மணமாகாக் கன்னியர்க்கு
திருமணமும் நடத்தி வைத்திடுவாள்

தாழம்பூ கொண்டு வந்தே - எங்கள்
தாட்சாயணியைப் பூஜை செய்தால்
வாழாப் பெண்ணை நாதனுடன்
வாழும் படியாய் செய்திடுவாள்

பத்ரம் பலகொண்டு வந்தே - எங்கள்
பகவதியை பூஜை செய்தால்
இத்தரை மேல் உள்ளவர்க்கே
புத்திர பாக்யம் தந்திடுவாள்

தாமரைப்பூ கொண்டு வந்தே - எங்கள்
சியாமளியைப் பூஜை செய்தால்
தாமதம் தான் செய்யாமலே அவள்
தாலிப் பிச்சை தந்திடுவாள்

மல்லிகைப்பூ கொண்டு வந்தே - எங்கள்
மஹேஸ்வரியைப் பூஜை செய்தால்
பில்லி சூன்யம் ஏவல் எல்லாம்
பின்னாலே ஓடச் செய்வாள்

சண்பகப்பூ கொண்டு வந்தே - எங்கள்
அம்பிகையைப் பூஜை செய்தால்
ஜன்மாந்தர பாபமெல்லாம்
தீர்த்து விலக்கி ஓட்டிடுவாள்

இருவாட்சி கொண்டு வந்தே - எங்கள்
ஹிரண்மஹியை பூஜை செய்தால்
மருள் சூழ்ந்த நெஞ்சினிலே ஞான
ஒளி வீசச் செய்திடுவாள்

அரளிப்பூ கொண்டு வந்தே - எஙகள்
அர்த்த நாரீஸ்வரியை பூஜை செய்தால்
அருள் புரிந்து ஆதரித்து
அனுக்கிரஹமும் செய்திடுவாள்

சாமந்திபூக் கொண்டு வந்தே - எங்கள்
சாந்தி துர்க்கையை பூஜை செய்தால்
சன்மார்க்கம் தந்து அவள்
சகல செல்வமும் தந்திடுவாள் (ரோஜாப்பூ)

**[2]**

ஸ்ரீ சக்கர நாயகி ஸ்ரீ புவனேஸ்வரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
வாராஹி வைஷ்ணவி வாரிஜ லோசனி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

ஸ்ரீ ராம சோதரி ஸ்ரீ ஜகன் நாயகி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
சங்கர சாம்பவி சந்த்ர கலாதரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

மதுரை மீனாட்சி மரகத வல்லி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
காஞ்சி காமாட்சி காசி விசாலாட்சி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

அரளகேசி அபிராம சுந்தரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
அன்னபூர்ணேஸ்வரி அகிலாண்ட நாயகி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

நித்ய கல்யாணி நிர்மல சுந்தரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
தீனதயாபரி திரிபுர சுந்தரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

பாப விமோசனி பர்வத வர்த்தினி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
கற்பகவல்லி கௌரி மனோஹரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

சிவ மனோகரி சிவகாம சுந்தரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
லாவண்ய சுந்தரி லலிதா மஹேஸ்வரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

சாந்த ஸ்வரூபிணி சாரதா தேவி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்
சங்கர நாயகி சியாமள சுந்தரி
ஸ்ரீ சாந்தி துர்கா பாலயமாம்

## ஸ்ரீ ராஜேஸ்வரி ஸ்துதி

அம்ப பரமேஸ்வரி அகிலாண்ட நாயகி
அராளகேசி மாம்பாஹி
அன்ன பூர்ணேஸ்வரி அம்புஜ வாஸினி
ஆனந்தவல்லி மாம்பாஹி
சந்தர கலாதரி சியாமளரூபிணி
சாரதாதேவி மாம்பாஹி
சாந்தஸ்வ ரூபிணி சங்கர மோஹினி
சாமுண்டேஸ்வரி மாம்பாஹி

மாதவ ஸோதரி மங்கள பாஷிணி
மரகதவல்லி மாம்பாஹி
மந்த்ரஸ்வரூபிணி மங்கள தாயினி
மதுரை மீனாட்சி மாம்பாஹி
பர்வத வர்த்தினி பரம கல்யாணி
பஞ்சதசாக்ஷரி மாம்பாஹி
பங்கஜ லோசனி பாப விமோசனி
ஸ்ரீ புவனேஸ்வரி மாம்பாஹி

கஞ்சுக தாரிணி கௌரி மனோகரி
கற்பகவல்லி மாம்பாஹி
காசி விசாலாட்சி காமித தாயினி
காஞ்சி காமாட்சி மாம்பாஹி
நதஜன பாலினி நிமல மனோன்மணி
நீலநிரஞ்ஜனி மாம்பாஹி
நித்ய கல்யாணி நிர்மல ரூபிணி
நீலாயதாட்சி மாம்பாஹி

தீன தயாபரி தர்மஸம்வர்த்தினி
திரிபுரசுந்தரி மாம்பாஹி
ஹ்ரீம்கார ரூபிணி ஈச மனோகரி
தேவிபவானி மாம்பாஹி
லயமன மோஹினி லாவண்ய சுந்தரி
லலிதா மகேஸ்வரி மாம்பாஹி
லகார ரூபிணி லலிதாங்க மோஹினி
ராஜராஜேஸ்வரி மாம்பாஹி
ஸ்ரீ அர்த்தநாரீஸ்வரி மாம்பாஹி

## அன்னையிடம் வேண்டல்

அம்மா தாயே ராஜேஸ்வரி
அகிலமுழுவதும் உன் ஆட்சி
கண்ணே மணியே காமாட்சி
கருணை புரிவாய் ராஜேஸ்வரி
அம்மா அம்மா அம்மா (அம்மா)

நங்கை நல்லூரில் குடியிருப்பு
சடையோன் உடலில் பாதிஇருப்பு
ஆயிரம் சூரியன் ஒளி உருவம்
அடியேன் மனதில் நிறை உருவம்
அம்மா அம்மா அம்மா (அம்மா)

நெடியோன் அருமை சோதரியே
அடியேன் எம்மை ஆதரியே
ஸ்ரீ சாந்தி துர்கை தாயே
உலகுக்கு நீயே அதிபதியே
அம்மா அம்மா அம்மா (அம்மா)

சங்கரர் பின்னே வந்தவளே
ராஜேஸ்வரியாக அமர்ந்தவளே
முனிவர்கள் மூவர்கள் தேவர்கள் போற்றி
முக்தி ராஜேஸ்வரி பொன்னடி போற்றி
அம்மா அம்மா அம்மா (அம்மா)

குறைவே இல்லா ஆனந்தி
முடிவே இல்லா ரூபாங்கி
விதியை மாற்றும் ராஜேஸ்வரி
முக்தி வரமே தருவாய் நீ
அம்மா அம்மா அம்மா (அம்மா)

## அருள்மிகு சக்தி

அம்மா தாயே சாந்தி துர்கா
அருளைத்தருவாய் சாந்தி துர்க்கா
ஆயிரம் நாமங்கள் கொண்டவளே
ஆதிபராசக்தி எனும் மாயே (அம்மா)

எழுதி எழுதி பழகி வந்தோம்
எழுத்துக் கூட்டி பாடி வந்தோம்
பாட்டினிலே நீ வந்தாய்
திரு ஆட்சி செய்து அருளுகிறாய் (அம்மா)

வெள்ளை மனம் உன் கோவிலென்பார்
வேண்டுதல் நம் எண்ணமென்பார்
சாந்தி உன் ஆலயமே கலை வாழும் கோவிலம்மா
கருவாகி உருவாகி கலையாவும் பெற்றிடவே
அருள் வாரி வழங்கிடுவாய் (அம்மா தாயே)

## ஓம் சக்தி

1. துர்க்கை முகத்தை பாருங்கள்
துன்பம் நீங்க பாடுங்கள்
இன்பக் கடலில் நீந்துங்கள்
துர்க்கையே துணையென வாழுங்கள் (துர்க்கை)

2. பதினாறு கைகள் தான் கொண்டு
பலவித ஆயுதம் அதில் ஏந்தி
போருக்குச் செல்லும் வீரனைப்போல்
வீர காட்சி தருகின்றாள் (துர்க்கை)

3. மகிஷனை வென்று அவன் தலையை
தன்கால் கீழ் அடக்கி நிற்கின்றாள்
வெற்றி சூடிய முகம் கொண்டு
பூவிதழ் புன்னகை புரிகின்றாள் (துர்க்கை)

4. கொட்டும் முரசில் ஒலி எழுப்பி
தட்டி அவளை எழுப்புங்கள்
தாரை ஊதி அழையுங்கள்
தாமரை முகத்தவள் வந்திடுவாள் (துர்க்கை)

**என்ன வேண்டும் அம்மா என்ன வேண்டும்**
**என்னையே தந்துவிட்டேன் என்ன வேண்டும்**

1. பொன்னுருவில் மஞ்சள் பூசி பொட்டும் வைத்து
பொன் வதன விழிகளில் மையும் தீட்டி
கருமேகக் கூந்தலில் மல்லிகை சாத்தி
கருமாரி மகிழ மலரான தாழை சாத்தி
(என்ன வேண்டும்)

2. பல வண்ண கற்களால் மகுடம் சாத்தி
பவழங்கள் கோத்த ஒரு மாலை சாத்தி
வைரத்தோடு உந்தன் காதில் சூட்டி
வைர மூக்குத்தியுடன் நத்தும் சூட்டி
(என்ன வேண்டும்)

3. பாலோடு பாகை நீறும் வைத்து
பாகெனும் உள்ள அன்பு தேனும் வைத்து
பாரோர் புகழ்கின்ற தாயும் உனக்கு
பாசத்தால் கண்ணீரால் பன்னீர்தெளித்து
(என்ன வேண்டும்)

4. ஆழப் பதித்தொரு ஜோதி ஏற்றி
ஆர்வ பூர்ண கும்பஜோதி காட்டி
நேரம் தவறாமல் க்ஷணம் மறவாமல்
நேசத்தால் என்னுயிர் கற்பூரம் காட்டி
(என்ன வேண்டும்)

## அன்பின் வடிவம் அம்மா

அன்பின் வடிவம் துர்கா துர்கா
ஆனந்த உருவம் துர்கா துர்கா
இன்ப ஒளியே துர்கா துர்கா
ஈடில்லா ஜோதியே துர்கா துர்கா
உண்மையின் உருவே துர்கா துர்கா
ஊமையை பேசவைப்பாள் துர்கா துர்கா
எங்களின் தாயே துர்கா துர்கா
ஏழைகளின் தெய்வமே துர்கா துர்கா
ஐயங்களைத் தீர்ப்பவளே துர்கா துர்கா
ஒன்றில் மூன்று சக்தியாம் துர்கா துர்கா
ஓங்காரி சங்கரி துர்கா துர்கா
ஔஷதம் ஆனவளே துர்கா துர்கா
அஃறிணைப் பொருளும் துர்கா துர்கா

## சக்தி வெள்ளம் துர்க்கை அம்மா நீயே!

சகல நலம் தரும் தெய்வம் நீயே!
முக்தி தரும் மூலச் சுடர் நீயே!
முன் இருந்து காப்பதுவும் நீயே!

யுக்தியெனும் ஞானமுதம் நீயே!
யுகம் கோடி நடத்துவதும் நீயே!
பக்தர்களின் ஜெயதுர்கா நீயே!
பார்வதியே நவராத்திரி தாயே!
பார்வதியே பவானி நீயே!
துரிதம் :
துர்க்கையம்மா தாயே துர்க்கையம்மா !
துன்பம் தீர்க்கும் தெய்வமே துர்க்கையம்மா !
துன்பம் தீர்க்க ஓடி வரும் துர்க்கையம்மா !
துணையிருந்து காத்திடுவாள் துர்க்கை அம்மா !

மணம் முடிக்க வந்திடுவாள் துர்க்கை அம்மா !
மணநாள் பார்த்துக் கொடுக்கும் துர்க்கை அம்மா
மனக் கவலையை தீர்ப்பவளே துர்க்கை அம்மா.
மனநிறைவைத் தருபவளே துர்க்கை அம்மா.

எலுமிச்சை விளக்குகள் எரியுதம்மா சந்நிதியில்
எலுமிச்சை விளக்குமேல் காட்சி தந்த தேவியே
கற்பூர தீபம் ஏற்றி வணங்கி வந்தேன் தாயே
கண் முன்னே வாரும் அம்மா ! அம்மா பவானி !!
(சக்தி வெள்ளம்)

## ஸ்ரீ துர்க்கா துதி

ஓம் சக்தி ஓம் என்று உருவான துர்க்கையே!
உலகங்கள் ஒவ்வொன்றும் படைத்திட்ட துர்க்கையே
மாமறையின் மந்திரத்தில் மொழியாகும் துர்க்கையே
மலரடியைச் சேர்ந்தோர்க்கு வழியாகும் அன்னையே!

நவதான்யக் கலசத்தில் உறைநின்ற துர்க்கையே
நாற்புறத்து பாலிகையில் நடைபோடும் துர்க்கையே
மலரோடு கனியாகும் மகிழ்ந்தேற்கும் துர்க்கையே
மணித்தீப தூபத்தில் மணமாகும் தேவியே!

தொழுவோர்க்கு பிறவி நலம் பொழிகின்ற துர்க்கையே
துணையாகி மறுமையிலும் வளம் போற்றும் துர்க்கையே
நவராத்ரி கனல் மூலக் கருவாகும் துர்க்கையே
நவமாதர் புடை சூழ நடமாடும் சண்டியே !

மாங்கல்யம் மணவாழ்க்கை அளிக்கின்ற துர்க்கையே
மகப்பேறு தந்தெம்மை மகிழ்விக்கும் துர்க்கையே
நிலவாழ்வு பொருள் நீ தந்தாய் துர்க்கையே
நிலையான கலை அறிவை கொடுத்தருளும் கௌரியே !
சக்தி ஓம்: சக்தி ஓம்: சக்தி ஓம் ! சக்தி ஓம் !

## தெம்மாங்கு

திந்தனதன்னா திந்தனதன்னா திந்தனதன்னா தாயே - ஓ
திந்தனதன்னா தாயே திந்தனதன்னா திந்தனதன்னா
திந்தன தன்னா தாயே

அம்மா மஞ்சள் புடவை கட்டி துர்க்கையம்மா தாயே
எங்கள் துர்க்கையம்மா தாயே; அவ ஆடிவரா ஓடிவரா
துர்க்கையம்மா தாயே (திந்தனதன்னா)

அம்மா எட்டு திசைகளிலும் கங்கையம்மா தாயே
எங்கள் கங்கையம்மா தாயே அவ ஏகாந்த சக்தியடி
கங்கையம்மா தாயே.
(திந்தனதன்னா)

அம்மா அஞ்சுதலை நாகமடி மாரியம்மா தாயே
கருமாரியம்மா தாயே அவமுப்பெரும் சக்தியடி
மாரியம்மா தாயே (திந்தனதன்னா)

அம்மா சாந்த ஸ்வரூபிணியாம் ராஜேஸ்வரி தாயே
சாந்தி துர்கா தாயே அவ சகலகலா ரூபிணியாம்
ராஜேஸ்வரி தாயே (திந்தனதன்னா)

அம்மா வெள்ளி பிரம்பெடுத்து வேம்புலியம்மா தாயே
எங்கள் வேம்புலியம்மா தாயே அவ வேண்டும் வரம்
தருபவளாம்
வேம்புலியம்மா தாயே (திந்தனதன்னா)

அம்மா வேப்பிலையை கையில் கொண்ட சந்தியம்மா தாயே
எங்கள் சந்தியம்மா தாயே அவ சத்தியத்தின் வடிவமடி
சந்தியம்மா தாயே (திந்தனதன்னா)

அம்மா எல்லைகளை காப்பவளாம் ஏழுரம்மா தாயே
எங்கள் ஏழுரம்மா தாயே அவ ஏழைகளை காப்பவளாம்
ஏழுரம்மா தாயே

அம்மா பத்து தலை நாகமடி நாகாத்தம்மா தாயே
எங்கள் நாகாத்தம்மாதாயே அவ நானிலத்தை ஆள்பவளாம்
நாகாத்தம்மா தாயே (திந்தனதன்னா)

அம்மா பசுமை நிறம் நிறைந்தவளாம் பஞ்சம்மா தாயே
எங்கள் பஞ்சம்மா தாயே எங்கள் பாவங்களை
போக்கிடுவாய்
பஞ்சம்மா தாயே (திந்தன தன்னா)

## சிந்தையிலே

சிந்தையிலே குடியிருப்பாய் துர்கையம்மா
நொந்தவரை வாழவைத்தாய் துர்கையம்மா
மஞ்சள்பூசி வணங்குகிறோம் துர்கையம்மா
எங்கள் மாங்கல்ய பலம் கொடுப்பாய் துர்கையம்மா

குங்குமத்தில் அர்ச்சிப்போம் துர்கையம்மா
எங்கள் குறையாவும் தீர்ப்பாய் துர்கையம்மா
பால் கொண்டு அபிஷேகம் செய்திடுவோம் துர்கையம்மா
பூகொண்டு திருமேனி அலங்கரிப்போம் துர்கையம்மா
வேப்பிலையின் சாமரத்தில் விசிறிடுவோம் துர்கையம்மா
எங்கள் வினையாவும் தீர்த்துவைப்பாய் துர்கையம்மா

## துர்கை

அன்னை துர்கையிடம் கையேந்துங்கள்
அவள் இல்லையென்று சொல்லுவதில்லை
பொறுமையாக கேட்டுப் பாருங்கள்
அவள் பொக்கிஷங்கள் மூடுவதில்லை

இல்லையென்று சொல்லும் மனம் இல்லாதவள்
ஈடு இணை இல்லாத கருணை உள்ளவள்
இன்னல்பட்டு எழுங்குரலை கேட்கின்றவள்
எண்ணங்களை இதயங்களை பார்க்கின்றவள் (அன்னை)

ஆசையுடன் கேட்பவர்க்கு அள்ளித் தருபவள்
அல்லல் துன்பம் துயரங்களை கிள்ளி எறிபவள்
பாசத்தோடு யாவரையும் பார்க்கின்றவள்
பாவங்களை பார்வையினால் மாய்க்கின்றவள் (அன்னை)

அல்லல் படும் மாந்தர்களே அயராதீர்கள்
துர்க்கை அன்னையின் பேரருளை நம்பி நில்லுங்கள்
அவளிடத்தில் துயரங்களை சொல்லிக் காட்டுங்கள்
அன்பு நோக்கு தருக என்று அழுது கேளுங்கள் (அன்னை)

தேடும் நேயர் நெஞ்சங்களில் குடியிருப்பவள்
தேடாத மனிதருக்கும் உணவளிப்பவள்
வாடும் இதயம் மலர்வதற்கு வழிவகுப்பவள்
வாஞ்சையோடு யாவரையும் பார்க்கின்றவள்
அலைமுழங்கும் கடல்படைத்து அழகு பார்ப்பவள்
(அன்னை)

அலை மீதும் மலைமீதும் ஆட்சி செய்பவள்
தலைவணங்கி கேட்பவர்க்கு தந்து மகிழ்பவள்
தரணி எங்கும் நிறைந்து நிற்கும் விஷ்ணு துர்கையே
மஹாதுர்க்கையே தேவிதுர்கையே.

## பச்சை பட்டு

பச்சை பட்டு கட்டிக் கொண்டு பளபளக்கும்
பராசக்திஉன் அழகு பார்த்து விட்டால்
இச்சையெல்லாம் விட்டு உந்தன் பக்கத்தில் வந்து ஒரு
பச்சை குழந்தையைப்போலே கொஞ்சி களிப்பேன்

சிகப்புபட்டு அணிந்த என் சிவசக்தியே பராசக்தியே
மூச்சை விட்டு உன்னை பாடவரம் அருள்வாய் - எந்தன்
மூச்சு நிற்கும் காலம் வரை அம்மாடி அம்மா என்னை
ஏச்சிவிட்டு தப்பிவிட எண்ணி விடாதே அம்மா (2)

வெள்ளை முல்லை மாலை அம்மா என்ன அழகு
வெள்ளி திருவாச்சியுடன் மின்னுகின்றது - ஒரு
எண்ண எண்ண எண்ணமெல்லாம் கண்ணாய் மாறுது - ஒரு
எல்லையில்லா ஆனந்தத்தை எண்ணுகின்றது.

## துர்கை துதி

முத்தான முத்துக்குமரி துர்கையே நீ வா வா
சித்தாடும் செல்வக்குமரி சிந்தை மகிழ வா வா
நீயாடும் அழகைக் கண்டு சூலம் ஆடி வருகுதம்மா

சூலம் ஆடும் அழகைக் கண்டு சிம்மம் ஆடி வருகுதம்மா
சிம்மம் ஆடும் அழகைக் கண்டு மனம் ஆடி வருகுதம்மா
மனம் ஆடும் அழகைக் கண்டு மக்கள் கூட்டம் பெருகுதம்மா
(முத்தான....)

மஞ்சளிலே குளிக்கவைத்துப பட்டாடை உடுத்திவைத்து
குங்குமத்தால் சாந்தெடுத்து அங்கமெல்லாம் பொட்டு வைத்து
செந்தூர திலகம் வைத்து நெஞ்சத்திலே உனைவைத்து
மஞ்சள் குங்குமத்தால் உன்னை அர்ச்சிப்பேன் வருவாய்
(முத்தான....)

முடிசூட்டி கொண்டையிட்டு துர்கையே உந்தனுக்கு
மணமுள்ள மலர்சூட்டி மையிட்டு பொட்டிட்டு
கம்மலுடன் ஜிமிக்கியை காதுகளிலே மாட்டி
முன்னழகும் பின்னழகும் நான் பார்த்து மகிழ்ந்திடுவேன்
(முத்தான....)

கல்வைத்த மோதிரமும் கைகளிலே வளையல் இட்டு
கழுத்திலே அணிவதற்கு புஷ்பராக மாலையோடு
தங்கத்தால் செய்ததோடு நவரத்ன கிரீடம் வைத்து
சிவப்புவண்ண பட்டுடித்தி நான் கண்டு மகிழ்ந்திடுவேன்.
(முத்தான....)

இடுக்கிலே உன்னைத் தூக்கித் தேரோட்டம் காட்டிடுவேன்
கால்கொலுசு கிலுகிலுக்க கையெடுத்து நடந்திடுவேன்
தவழ்ந்து விளையாடிய பின்னர் தள்ளாடி நடக்கையிலே
தூளியிலே தூங்க வைத்து தாலாட்டுப் பாடிடுவேன்

ஆராரோ ஆரிரரோ
ஆராரோ ஆரிரரோ

(முத்தான....)

## கருமாரியம்மன் பாடல்

ஏற்றினேன் மாவிளக்கு எங்கள் கருமாரியம்மா - நீ
எங்கெங்கும் நிறைந்தவளே எங்கள் கருமாரியம்மா

1. உள்ளமதை மாவாக்கி என்னுடலைத் தட்டாக்கி
கண்ணீரை நெய்யாக்கி என்னுயிரைத் திரியாக்கி
(ஏற்றினேன்)

2. ஆணவத்தை அனலாக்கி அன்புதனில் கோலமிட்டு - அங்கு
உனை அமரச் செய்தேன் அன்புமலர் பூஜைசெய்ய
(ஏற்றினேன்)

3. காத்யாயினி வந்திடுவாய் கல்யாணி வந்திடுவாய்
கலைவாணி வந்திடுவாய் கேட்டவரம் தந்திடுவாய்
(ஏற்றினேன்)

4. அனலிட்ட புழுபோல் நான் துடிப்பதையே பார்த்தாலன்றோ
அன்னை நீயும் வந்திடுவாய் அடியேனைக் காத்திடுவாய்
(ஏற்றினேன்)

5. உன்பாதம் சரணம் அம்மா உமாதேவி நீயம்மா
இப்புவிதனில் அம்மா இனி இந்தப்பிறவியே வேண்டாமம்மா
இந்த வரம் தாருமம்மா ராஜேஸ்வரிதாயே உன்னை
(ஏற்றினேன்)

## காமாட்சியம்மன் விருத்தம்

பத்து விரல் மோதிரம் எத்தனை பிரகாசமது
பாடகந் தண்டை கொலுசும்
பச்சை வைடூரிய மிச்சையாயி ழைத்திட்ட
பாதச்சிலம்பினொளியும்
முத்து மூக்குத்தியும் ரத்தினப் பதக்கமும்
மோகன மாலையழகும்
முழுவதும் வைடூரியம் புஷ்பராகத்தினால்
முடிந்திட்ட தாலியழகும்
சுத்தமாயிருக்கின்ற காதினிற் கம்மலுஞ்
செங்கையிற் பொன்கங்கணம்

ஜெகமெல்லாம் விலைபெற்ற முகமெலாமொளிரும்
சிறுகாது கொப்பினழகும்
அத்தி வரதன் தங்கை சத்தி சிவரூபத்தை
யடியனாற் சொல்ல திறமோ
அழகான காஞ்சியில் புகழாக வாழ்ந்திடும்
அம்மை காமாட்சியுமையே.

## மீனாட்சி அம்மன் துதி

பச்சைமணி பூங்கொடியாள்
பால அமுத பைங்கிளியாள்
இச்சைகொண்ட சுந்தரனை
ஏற்று வந்த மந்திரத்தாள்
கோயிலில் குடிபுகுந்தாள்
கோயிலுக்கு மேன்மை தந்தாள்
தோடுடைய செவியனென்று
சொக்க வைத்த சொக்கனென்றாள்
மீனாக்ஷி மதுரை மீனாக்ஷி
மரகதவல்லி மீனாக்ஷி (மீ)

அங்கையர் கண்ணி மீனாக்ஷி
அழகு இதழில் தேனாக்ஷி

கண்கள் இரண்டில் மானாக்ஷி இந்த
காசினி எல்லாம் யாராக்ஷி
கொத்தும் கினி கொண்டாட
காந்தல் தனில் வண்டாட
தென்றல் வந்துதாலாட்ட (மீ)

முத்து நகை கொண்ட மோகனவல்லிக்கு
எத்தனை பட்டங்கள் கூடலிலே (மீ)
தண்டையிட்ட கால்கள் கண்டேன்
தங்கவளை கைகள் கண்டேன்
அங்கவளை கண்ட பின்பு

என்கவலை மறந்து விட்டேன்
ஊமைக்குருபரருக்கு சொல்லிக் கொடுத்தது ஒருகோடி
அண்ணன் கொடுத்த பொன்னும் பொருளோடு
இன்னும் கொடுப்போம் பலகோடி (மீ)

## நவரத்ன ஸ்தோத் மாலா

ஞான கணேசா சரணம் சரணம்
ஞான ஸ்கந்தா சரணம் சரணம்
ஞான சத்குரோ சரணம் சரணம்
ஞானாந்தா சரணம் சரணம்

ஆக்கும் தொழில் ஐந்தர நாற்ற நலம்
பூக்கும் நகையாள் புவனேஸ்வரிபால்
சேர்க்கும் நவரத்தின மாலையினை
காக்கும் கணநாயக வாரணமே
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே

## வைரம்

சுற்றும் தெளியார் காடே கதியாம்
கண்மூடி நெடுங்கின வான தவம்
பெற்றும் தெளியார் நினைப் பென்னில்
அவம் பெருகும் பிழையேன் பேசத்தகுமோ

பற்றும் வைர படைவாள் வைரப்
பகைவர்க்கு யமனாக எடுத்தவளே
வற்றாத அருட்சுனையாய் வருவாய்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே

## நீலம்

மூலக் கனலே சரணம் சரணம்
முடியா முதலே சரணம் சரணம்
கோலக் கிளியே சரணம் சரணம்
குன்றாத ஒளிக்குலையே சரணம் சரணம்
நீலத் திருமேனியிலே நினைவாய்
நினைவற்றியேன் நின்றேன் அருள்வாய்
வாலைக் குமரி வருவாய் வருவாய்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே!

## முத்து

முத்தே வரும் முத்தொழில் ஆற்றிடவே
முன்நின்று அருளும் முதல்வி சரணம்
வித்தே விளைவே சரணம் சரணம்
வேதாந்த நிவாசினியே சரணம்
தத்தேறிய நான் தனயன் தாய்நீ
சாகாத வரம் தரவே வருவாய்
மத்தேறுத் திக்கினை வாழ்வடையேன்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே!

## பவழம்

அந்தி மயங்கிய வான விதானம்
அன்னை நடம் செய்யும் ஆனந்தமேடை
சிந்தை நிரம்பவழம் பொழிவாரோ
தேம்பொழிலாம் இது செய்தவள் யாரே
எண்ணுபவள் அருள் எண்ண மிகுத்தாள்
எந்த இடத்தும் மனத்ம இருப்பாள்
மந்திர வேத மயப்பொருளானாள்
மாதா ஜெயஓம் லலிதாம்பிகையே!

